# நிறைபணி விழா மலர்

சய — புரட்டாசி — அசுபதி

திருவாவடுதுறை ஆதீனவெளியீடு 85

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சீகாழி - சட்டைநாதவள்ளல்

அருளிச்செய்த

# சதாசிவரூபம்

பழையவுரையுடன்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து
இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்**
கட்டளையிட்டருளியபடி

திருவாவடுதுறை ஆதீன வித்துவான்
**த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்**
பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்துப் பதிப்பிக்கப்பெற்றன.



மெய்கண்டார் யாண்டு—731.
1954

## நிறைபணி விழா மலர்

சய—புரட்டாசி—அசுபதி

1952 : சிவஞானபோதம் பழையவுரை
1953 : காசிகண்டம்
1954 : சதாசிவரூபம் முதலியன

ஸ்ரீ முருகன் அச்சகம்,
கும்பகோணம்.

## இப்புத்தகத்துள் அடங்கியவை

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரை

சதாசிவரூபம் என்பது சதாசிவமூர்த்தியினது சொரூபம் என விரியும். ஆறும் வேற்றுமைத்தொகை. சதாசிவமூர்த்தியின் சொரூபத்தை அறிவிக்கும்நூல் எனப் பொருள்தந்து நிற்றலால் இதனை இரண்டனுருபும் பயனும் உடன் தொக்கதொகையாகவும் கொள்ளலாம். அன்மொழித்தொகை. இது வாதுளம், காமிகம் என்னும் இரண்டு ஆகமங்களின் சாரமாகத் தொகுத்துச் செய்யப்பட்டது. இதனைத்தமிழில் அருளிச்செய்த பரமோபகாரி ஸ்ரீ சட்டைநாதவள்ளல் என்னும் பெயருடைய ஆசிரியர். இவர்கள் சீகாழியில் தோன்றியவர்கள். வடமொழி தமிழ்மொழியாகிய இரு மொழியிலும் வல்லவர்கள். காலம் முதலியன தெரியவில்லை. சிறப்புப்பாயிரத்தால் இவை யாவும் அறியக்கிடப்பன. சிறப்புப்பாயிரம் செய்தார்பெயர் முதலியனவும் இதுவரை கிடைக்கவில்லை. மேலும் செய்யும் ஆராய்ச்சிகளால் விளங்கும். இந்நூல் முழுவதும் நூற்பாக்களால் அமையப் பெற்றுளது. இதன்கண் உள்ள நூற்பாக்கள்-152. இதனைச் சதாசிவரூப அகவல் எனவும் சில பெரியோர் கூறுவர். ஏடுகளில் சதாசிவரூபம் என்றுதான் உள்ளது. அச்சிட்ட ரிப்பன் பிரஸ் பதிப்பிலும் சதாசிவரூபம் மூலமும் உரையும் என்றே காணப்படுகின்றது. ஆகலின், இது சதாசிவரூபம் என்ற பெயருடனேயே பதிக்கப்பட்டது. இதன் உரை மிகப்பழையவுரை. இவ்வுரையின்றேல் நூற்பாக்களின் பொருள் முழுவதும் விளங்கிக் கொள்ள இயலாது. உரையாசிரியரும் வடமொழி தமிழ்மொழியில் வல்லவர் என்பதை உரையால் அறியலாம். உரைப்போக்கு மிகத் தெளிவானது. சிவபூசை செய்யும் மெய்யன்பர்களுக்கு இந்நூல் மிகமிகஅவசியமானது. சாதாக்கியத்தின்பேதம் உணர்தல் அவசியம்.

சிவனுடைய உண்மைத்தத்துவங்கள்முப்பத்தொன்று. நின்மல சிவம் சதாசிவம் மகேசுரம் என்பன—1. சிவம், பராபரம், சூக்குமம், நித்தியம், பூரணம், நாசமிலி, நின்மலம், அருபவாதீதம், பிரமாணாதீதம், குணாதீதம் என்னும் தன்மைகளால் நிட்களசிவம் என்றது—2. பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி ஆகிய பஞ்சசத்திகள்-3. பஞ்ச சத்திகளும் நிட்களம்-4. சாதாக்கியம் என்பது—5. பஞ்ச சாதாக்கியம்—6. சிவசாதாக்கிய முதலிய ஐந்தின் தன்மை — சாதாக்கியத்துக்குச் சத்தி உபாதானமல்ல — 8. தத்துவம், மூர்த்தி, பிரபாவம் இன்னதென்பது — 9. மிகுதிமேற்கம் இவை—10. சிவசாதாக்கிய முதலியவற்றின் இலக்கணம் அதாவது நாமரூபம் என்பன—12. நாதவிந்துக்களின் கூட்டத்தில் பொருந்தும் தொழில்களாவன — 13. கன்மசாதாக்கியம் என்பதற்குரிய காரணம்—14. பிண்டமென்பது—15. காரணகாரியமாயுள்ள சுத்த அசுத்த தத்துவங்கள் கன்மசாதாக்கியத்தை ஆசரித்திருத்தல்-16. சுத்ததத்துவமுதலியன சதாசிவத்தினுடைய வியாத்தி வியாப்பியங்கள்—அபரநாதத்தின் கலைகள்—17-19. நாடிகள் மூன்று — அபர விந்துவை அதிட்டிக்கும் கலைகள்—பரவிந்து பரநாதம் சத்தி சிவான்மிகமாயிருந்து அபரவிந்துவையும், அபரநாதத்தையும் நடத்துதல் —20—22. பஞ்சகலைகள்—24. சுத்தாசுத்த பஞ்சகிருத்தியத்தின் தொழில் — கன்மசாதாக்கியருக்கு ஐந்துமுகம் — 25. அகாசிருதர் முதலியோர் வியாத்தி — 27. ஆடகேசுரர், கூர்மாண்டதேவர், காலாக்கினிருத்திரர், ஆதாரசத்தி முதலியன—28-31. அநந்தேசுரர் அசுத்தமாயையைப்பிரேரித்தல்—32. சுத்ததத்துவங்கள் இலிங்கத்தை ஆசரித்திருத்தல்—33. நின்மலசிவன் அசுத்ததத்துவங்களை அடைவே நடத்துதல்—34. காரணேசுரர் வியாத்தி—36—40. சதாசிவர் காரணேசுரர் ஐவரையும் அதிட்டித்தல்—47. ஞானம் முத்தும் தோன்றுதல் — 43. இச்சாஞானக்கிரியைகள் — 45, 46. பிரமா விஷ்ணு உருத்திரர் வியாத்தி—47. பிரம விஷ்ணுக்களுக்கு ஆன்ம ஞானமே இயல்பு—48. பிரம விஷ்ணு உருத்திரர்களைச் சிவசத்தி சேட்டித்தல்—50. சுத்தவித்தை சிவசத்தி என்பது — 54. சுத்த வித்தை மகேசுரங்கள் சத்தி சிவான்மிகமாய் இருந்து நடத்தும்

அநுக்கிரகத்தொழில்–56. ஆன்மார்த்தத்தில் பரசிவம் பரை மகேசுரம் சுத்தவித்தை சதாசிவம் இவர்கள் அநுக்கிரகத்தொழில்-57-62. அசுத்தமாயையின் இலக்கணம்–64–91. புத்திகுணம் எட்டு–இவற்றின்பேதம்–இலக்கணம் முதலியன–92–113. பரமசிவனுடைய சுத்தகுணம் ஐந்தும் கன்மசாதாக்கியருக்கு ஐந்துமுகம்-118. சதாசிவர் திருமுகத்தில் சித்தாந்தமாகிய ஆகமம் தோன்றுதல்–120. தண்டபங்கி வத்திரபங்கி–121. சகளநிஷ்களம்–122. முப்பத்தெட்டுக் கலாசத்தி–123. கன்மசாதாக்கியர் தியானம்–125. கன்மசாதாக்கியர் திருமேனியில் பஞ்சசாதாக்கியம் அடைந்தமுறை-126. ஈசானமுகம் மற்றை நாலுமுகத்திலும் வியாபித்தல்–128. கிரியாபூசைக்குக்கன்மசாதாக்கியரே கருத்தா, அவரைத்தற்புருடமுகத்தில் கிரியாபூசை பண்ணுவது–129. சதாசிவநாயனாருடைய திருமேனி வித்தியாதேகம் முதலியன–130. ஐந்து ஆவரணங்களிலும் உள்ளவர்-131. இலிங்கபூசையில் ஆவரணங்களின் வியாத்தி–132. சதாசிவர் எழுந்தருளியிருக்கும் பதுமபீடிகை இலக்கணம்–133. சிவாதனம்–134. ஆவாகனம் முதல் பராங்முக அருக்கியம் வரையில் உள்ளவைகளின் காரணம்-135-150. ஞானபூசை, கிரியாபூசைகள்–151. ஞானபூசை செய்யும் சீவன்முத்தர் சிவசாயுச்சியம் பெறுவதில் ஐயமில்லை, ஆதனம்–மூர்த்தி–மூலங்கள்-152 என்பன.

சீகாழியில் சதாசிவரூபரூபியாகிய ஸ்ரீசட்டைநாதவள்ளல் என்பவரையன்றிப் பல வள்ளல்கள் இருந்திருக்கின்றனர். அவர்கள் வள்ளலார் சந்தானத்தைச்சேர்ந்தவர்கள் எனப் பெரியோர்கூறுவர். அங்கங்கே சிலர் வள்ளலார் சந்தானத்திலே தீட்சைபெற்றவர்களாக் உள்ளனர். அவர்கள் யாவரும் திரிபுண்டரம் தரிக்குமிடத்து முழங்கை, மணிக்கட்டு இவைகளை நீக்கிப் பன்னிரண்டிடத்தரித்துக் கொள்ளுகின்றனர்.

இனி, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருவடிக்கண் அன்பு பூண்ட வள்ளலார் அறுபத்து நால்வருள் ஒருவராகிய சீ ஞான வள்ளலார் இருபது ஞானசாத்திரங்கள் அருளிச்செய்திருக்

கின்றார்கள். அவைகள் வேதாந்த சித்தாந்த சமரச ஞானநூல்களாம். அவை வருமாறு :—

1. சத்திய ஞான போதம், 2. பதிபசுபாச விளக்கம், 3. சித்தாந்ததரிசனம், 4. உபதேசமாலை, 5. சிவஞானப்பிரகாச வெண்பா, 6. ஞான விளக்கம், 7. அத்துவிதக் கலிவெண்பா, 8. அதிரகசியம், 9. சிவாகமக் கச்சிமாலை, 10. கர்ணாமிர்தம், 11. சுருதிசார விளக்கம், 12. சிந்தனை வெண்பா, 13. நிராமய வந்தாதி, 14. அறுபத்துநாலுசங்கை, 15. தசவழக்குச் சிந்தனை, 16. குருமரபு சிந்தனை, 17. அநுபவ சந்திரிகை, 18. திருமுகப்பாசுரம், 19. அதிகாரப்பிள்ளையட்டவணை, 20. மரபட்டவணை என்பன சிவஞானவள்ளலார் அருளிய ஞானநூல்களாம்.

ஒழிவிலொடுக்கம் என்னும் ஞானநூலை அருளிச் செய்த கண்ணுடைய வள்ளலாரும் சீகாழிப்பதியினரே. ஒழிவிலொடுக்கம் பொதுவிலுபதேசம், சத்திநிபாதத்துத்தமர் ஒழிவு, யோகக்கழற்றி, கிரியைக்கழற்றி, சரியைக்கழற்றி, விரத்திவிளக்கம், துறவு, அருளவத்தைத்தன்மை, வாதனைமாண்டார்தன்மை, நிலையியல்பு எனப் பத்தியல்களுடையது. இஃது ஆன்மாபாசோபாதியினீங்கி, அருளில் அழுந்தி,தூய்மையுறுதற்குக்கருவியானஒருநூல்.வேதாந்தசித்தாந்தம் இரண்டையும் தம்முள் முரணுதவாறு அவ்விரண்டன்பொருள் பெரும்பான்மையான்ஒருமைப்படுத்துரைப்பது. இஃது அறுவகைச்சமயங்களுள்வைத்துச் சிவாத்துவிதம்போதிப்பது. சித்தாந்தசைவந்துச்சு அயன்மைபூண்டு நிற்பது. மற்றிது சுத்தசைவநூல் என்பாருமுளர். சுத்தசைவத்திற்கும் சிவாத்துவிதசைவத்திற்கும் தம்முள் வேறுபாடு சிவஞானமாபாடியத் திட்காண்க. சிவாத்துவிதமாவது — நிமித்தகாரணபரிணாமவாதம். நிமித்தகாரணனாகிய முதல்வன் மாயையோடுங்கூடி முதற்காரணமுமாய்ப்பரிணமிப்பனென்பதே சிவாத்துவிதசைவர் கொள்கை என்க. கண்ணுடைய வள்ளலார் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை உபாசனாமூர்த்தியாகக் கொண்டவர்கள் என்பர். இவ்வள்ளலார் ஆதிசைவமரபினரோ? அன்றிப்பரம்பரைச்

சைவவேளாண்குலத்தினரோ? என்பது ஆராய்தற்குரியது. காஞ்சீபுரம் கச்சியானவந்தவள்ளலார் ஆதீனம் ஒன்றுளது. அதில் வேளாண்மரபினரே ஆதீனகர்த்தராக உள்ளனர் என்று அறிந்தோர் கூறுவர்.

இனி, சதாசிவரூபத்தை அடுத்துள்ள நூல் 2. சிவபுண்ணியத் தெளிவு என்பதாம். இதனை இயற்றியருளியவர் பெயர் முதலியன விளங்கவில்லை. ஸ்ரீ மெய்கண்டதேவநாயனாருடைய பரம்பரையில் வந்த சிவபுரம்-சத்தியஞானி என்னும் பெரியோருடைய சீடர் இவர் என்பதும், குகை மறைஞானதேசிகர் துதியை இந்நூலில் கூறியிருத்தலின் அக்குகைமடத்தின் தொடர்புடையவர் இவர் என்பதும் தெளிவாக விளங்குகிறது. மெய்கண்டதேவர், அருணந்திதேவர், உமாபதிதேவர் ஆகிய மூன்று சந்தானகுரவர் துதிகள் மட்டும் இதில் உள்ளன. அகத்தியமுனிவர், காரைக்காலம்மையார் துதிகளும் சமய குரவர் துதிகளும் உள. இந்நூல் அசிந்தியவிசுவசாதாக்கியம் என்னும் ஆகமத்துள் கூறப்பட்ட சிவபுண்ணியங்களைச் சிவபுண்ணியத் தெளிவு என்னும் பெயரால் கூறுவதாக இவ்வாசிரியர் நூற்பெயர் கூறுமிடத்துச் சொல்லியருளுகின்றார். சைவர்கள்யாவரும் தெரிந்து கொள்ளவேண்டிய பல விஷயங்கள் தெளிவாக இதில் சொல்லப் பட்டுள்ளன.

3. முத்திராலட்சணம் என்னும் நூல் அடுத்துவைக்கப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் வரலாறு முதலியன நன்கு விளங்கவில்லை. ஆயினும் சிவபூசைக்கு இன்றியமையாத முத்திரைகள் இதில் கூறப்பட்டிருத்தலால் இதனையும் அச்சிட்டுள்ளேன். இதன் கண் ஆவாகனமுத்திரை முதல் மகாமுத்திரை இறுதியாக 33முத்திரைகளின் இலக்கணம் கூறப்பட்டுள்ளமை காண்க.

4. பதிபசுபாசப்பனுவல் என்னும் நூலை அருளிச்செய்தவர்கள் இவ்வாதீனத்து மூன்றாவது ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகளாவார். இதுவசனவடிவில் சுருக்கமாகஉள்ளது. இறுதிச்செய்யுள் நூலாசிரியர் பெயர் முதலியன கூறுகின்றது.

5. அளவை அட்டவணை—6. அளவை இலக்கணம் என்பன சிவஞானசித்தியாரில் கூறப்பட்டுள்ள அளவை இலக்கணத்தை நன்கு விளக்குவன. ஆகலின், வசனவடிவில் அமைந்த இவை சாத்திரபாடம் கேட்கும் மாணவர்கள் கற்பதற்கு எளிதாக முதலிற் கேட்டற்குரியனவாம். இவற்றை இயற்றிய ஆசிரியர் பெயர் முதலியனவும் தெரிந்துகொள்ளக்கூடவில்லை.

7. சைவ சோடசக்கிரியை விளக்கம்— 8. பதினாறு சம்ஸ்காரங்கள் இவை வைதிகசைவர்கள் நன்கு அறிந்துகொள்ளத் தக்கன.

9. மகேசுரபூசை ஆசீர்வாதம் என்பது இவ்வாதீனத்தில் நாடோறும் மகேசுரபூசையில் நடைபெறுவது. இதனையும் பாது காக்கும் பொருட்டு இத்தொகுப்பின் இறுதியில் வைத்துள்ளேன்.

இந்தப்பதிப்பில் சிறந்த முறையில் சதாசிவரூபம் திருத்தம் பெற்றுள்ளது என்பதை முன்னையபதிப்புக்களையும் உடன்வைத்து நோக்குவோருக்கு நன்கு விளங்கும். இவ்வாதீனப்பதிப்புக்களின் பெருமை மற்றைய பதிப்புக்களையும் ஒருசேரவைத்து ஆராய்வாருக் கன்றி விளங்காது. சிலர் பழைய பதிப்புக்களையும் பார்த்தவரல்லரா கலின் அவர் குறைபோலச் சில கூறுவர். சதாசிவரூபம், சிவபுண்ணி யத் தெளிவுகளுக்குச் செய்யுள்முதற்குறிப்பகராதிகளும் இப்பதிப் பில் சேர்க்கப்பட்டுள்ளமை காண்க.

இனி, இவைகளைப் பிரதிபண்ணுங்காலத்தும், அச்சிடுங்காலத் தும் உடனிருந்து ஒப்புநோக்குதல், ப்ரூவ் திருத்துதல், பரிசோதனை செய்தல் முதலிய உதவிகளைச்செய்துவந்த தமிழறிஞரும், சைவநூற் பயிற்சிமிக்கவரும், என் சகோதரரும் ஆகிய T. S. இராசகோபால பிள்ளை, வித்துவான், ச. நடராச பிள்ளை, M. திருநாவுக்கரசு முதலியோருக்கு ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் கருணையும், ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரிய மூர்த்தியின் திருவருளும் நாளும் நாளும் பெருகுவதாகுக எனப்பிரார்த்திக்கின்றேன்.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு."

குறள் — 211.

இவைகளையெல்லாம் நன்கு ஆராய்ந்து பதிக்குமாறு கட்டளையிட்டு அவ்வப்போது ஆவனசெய்தருளி ஸ்ரீ மெய்கண்டசாத்திரப் பிரதிஷ்டாசாரியராய் இவ்வாதீனத்தில் இப்பொழுது இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானமாகவீற்றிருந்தருளும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள் கருணைத்திறத்தையும், பெருங்கொடைத்திறத்தையும் என்னென்பேம்! இவர்கள் ஆதீன குருமூர்த்தியாக எழுந்தருளிய மூன்று ஆண்டுகளுள் தமது ஆதீனத்துக்கல்விக்களஞ்சியமாகிய சரஸ்வதி மஹால் புத்தக சாலையிலுள்ள எத்தனையோ பலநூல்கள் ஏட்டுச்சுவடிகளிலிருந்து அச்சுவாகனமேறி உலகமெங்கும் உலாவரலாயின. இதன்கண்உள்ள குற்றங்களைப் பொறுத்தருளுமாறு அறிஞருலகத்தைப் பன்முறை வேண்டுகின்றேம். திருத்தமுளதாயின் தெரிவித்தால் இன்னும் திருந்தியமுறையில் நூல்கள் வெளிவர ஏதுவாம் என்பதையும் அவர்கட்கு விண்ணப்பிக்கின்றேன்.

"ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு."

"பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின்."

குறள் — 215, 216.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் வாழ்க.

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,
ஆதீனவித்துவான்.

திருவாவடுதுறை
11—10—54.

# பதினாறு பேறு



மறைகள் நிந்தனை சைவநிந் தனைபொறா மனமும்
தறுக ணைம்புலன்களுக் கேவல் செய்துறாச் சதுரும்
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும்.

யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும்
மாத வத்தினோ ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும்.

மனமும் வாக்குநின் னன்பர்பா லொருப்படு செயலும்
கனவி லும்முனை தன்பருக் கடிமையாங் கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனித! நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும்.

தீமை யாம்புறச் சமயங்க ளொழித்திடுந் திறனும்
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறா வளனும்
ஏமு றும்பரா தாரநச் சிடாதநன் னோன்பும்
தூய்மை நெஞ்சின்யா னெனதெனுஞ் செருக்குறாத் தரமும்.

துறக்கமீ துறையினு நரகிற் றோய்கினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும! விவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.



துதிவாணி வீரம் விசயம்சந் தானம் துணிவுதனம்
அதிதானி யம்சவு பாக்கியம் போக மறிவழகு
புதிதாம் பெருமை யறங்குல நோயகல் பூண்வயது
பதினாறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்.

# குருமரபு வாழ்த்து.

திருச்சிற்றம்பலம்.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநுவாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ"

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள்.

உ

சிவமயம்.

நச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

மலைவளர் குங்கும வனமுலை சுரந்த
கலைவளர் ஞானம் கதிர்மணி வள்ளத்
தந்நிலை அமுதுசெய் தமலனை நோக்கி
என்னுளம் கவர்ந்தவன் இவனென் றேத்திய
மறைத்தமிழ்க் கவுணியன் மலர்க்கழல் யணங்கிப்
பரைமுதற் பஞ்ச சத்தி களையும்
விரைவுடன் ஐந்தொழில் விரிப்பது வேண்டி
ஆக்கி அவர்க ளிடத்தில் அருட்சா
தாக்கியம் ஐந்தாய்த் தம்மில் அவைதிரண்
டெழிற்றெழிற் சாதாக் கியமா யதம்வர்
நிழற்கதிர்ச் சகள நிட்கள மாகையிற்
சுத்தா சுத்த தத்துவம் இவர்தமை
ஒத்தா சரிக்கும் ஒழுக்கமும் இவரே
அனைத்தா தாரம் ஆகையும் இவர்பால்
தனிச்சிவன் வியாபிக் கின்ற தன்மையும்
இவர்தமை அருச்சித் தேத்தும் முறைமையும்
கயிலையில் வாதுளம் காமிகம் என்னும்
இரண்டு தந்திரத் தெங்கோன் அருளால்
திரண்ட பொருள்களைச் சீர்பெறத் தொகுத்துத்
தண்டமிழ்த் தொடையால் சதாசிவ ரூபமென்
றெண்டிறற் பனுவல் உளங்கனிந் துரைத்தோன்
ஞானக் குழவியும் நாவினுக் கிறைவனும்

# சிறப்புப்பாயிரம்

ஊனமில் ஊரனும் ஒருவடி வாகிச்
சிரபுரத் துதித்தோன் திருநெறிக் காவலன்
தருசிவ ஞான சதுர பாடிகன்
அஞ்சுக போதம் அருள்புரி வள்ளல்
கஞ்சுக நாதன் கலைத்தமிழ்க் கடலே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

குறிப்பு:-இஃது இயற்றினார் பெயர்முதலிய விவரங்கள் தெரிந்தில

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சதாசிவரூபம்

## மூலமும் — பழையவுரையும்.

1, உயர்மறை புகழ்சிவன் ஓங்கு சதாசிவன்
இயலும் மகேசன் எனமூன் றும்அவை
அருவே அருவுரு உருவாய் அடைவே
அரிதுணர் ஒன்றைந் தையைந் தாகி
ஒருதொகை முப்பத் தொன்று கும்மே.

(இ-ள்) வேதத்தின் முடிவாகிய மகாவாக்கியம் புகழ்கின்ற நின்மலசிவம், அதில் ஆன்ம இரக்கமே வடிவாகிய சதாசிவம், அந்த ஆன்ம இரக்கமே வடிவாகி அவற்றை நடத்தும் மகேசுரம் என மூவகை ஆகும். இவைகளில் நின்மலசிவம் வடிவு அறுதியாய் இருக்கும். சதாசிவம் சத்தி காரியத்துடனே கூடிய வடிவம் வடிவு அறுதியாய் இருக்கும். மகேசுரம் அந்தச்சத்தி காரியமான வயிந்தவத்தை நடத்தும் வடிவாய் இருக்கும். வாக்குமனாதீதமானசிவம் ஒன்றும், சாதாக்கியம் ஐந்தும், மகேசுரம் இருபத்தைந்தும் ஆக முப்பத்தொன்றும் சிவனுடைய உண்மையான தத்துவங்களாம் என்க.

2. அவற்றுள்,
நிகழ்சிவம் பராபரம் சூக்குமம் நித்தியம்
எங்கும் பூரணம் நாசமில் லாதது
நின்மல அனுபவம் நிகழ்பிர மாணம்
தன்னில் உணர்ந்திடு தற்கரி தானது
சொன்னவில் குணங்களும் கூடா ததுவே.

(இ-ள்) இம்மூவகையில் மூன்றிய சிவத்தை விளக்கச்சொல்லுமிடத்து முதற்சொன்ன சிவம் சுத்தம் ஆதலால், சிவம் என்றது. பரையை நடத்துதலால் பராபரம் என்றது. உயிருக்குயிராய் நின்றாலும் போதத்தால் எட்டப்படாதது; ஆகையால் சூக்குமம் என்றது. தனக்கு ஓர் காரணம் இன்மையால் நித்தியம் என்றது. சர்வவியாபி ஆகையால் எங்கும் பூரணம் என்றது. அழிவிக்கும் தன்மை ஒழியாது ஆகையால் நாசமிலி என்றது. தனது சத்தியினால் பாசத் தொழிலை நடத்தினும், அதில் தோயாதவன் ஆகையால் நின்மலம் என்றது. இன்னதன்மையன் என்று உவமிக்க ஒண்ணாது ஆகையால் அநுபவாதீதம் என்றது. அறியப்பட்ட அளவைப்பிரமாணங்களால் அறிய ஒண்ணாதாகையால் பிரமாணாதீதம் என்றது. சொல்லும் பெரிய குணங்களுக்கு அப்பாற்பட்டு அருமையமாய் இருக்கையால் குணாதீதம் என்றது. ஆன்மாக்களுக்கு அநுக்கிரக நிமித்தமாக முப்பத்துத் தன்மைகளும் உடைத்தாகையால் 'நிட்களசிவம்' எனப்பெயர் பெற்றுப் பரமசிவத்தில் ஆயிரத்து ஒருகூறாய் உற்றது என்க.

3. அன்ன சிவமா யிரமாய் அதிலொன்
றுன்னிய பரையதில் ஆயிரத் தொருகூ
றுதியாய் அதிலோர் ஆயிரங் கூற்றொரு
பேதமிச் சைஅதில் ஆயிரம் பிரிவொன்
றிணங்கு ஞானம தீரைஞ் ஞூற்றொரு
பங்கு தொழிலிவை பஞ்சசத் திகளே.

(இ-ள்) பரமசிவனைப்பிரியாத அருட்சத்தியானது பரசிவத்தில் ஆயிரத்தொரு கூறான நிட்கள சிவனுடனே கூடிக் கிருத்தியத்தைத் திருவுள்ளத்தில் அடைப்பது பராசத்தி எனப்படும். அதில் ஆயிரத்து ஒருகூறு வலியையுடைத்தாய்ப் பெத்த முத்திகளில் வியாபிப்பது ஆதிசத்தி எனப்படும். அதில் ஆயிரத்து ஒருகூறு வலியை உடைத்தாய் வடிவைப் பிரேரிப்பது இச்சா சத்தி எனப்படும். அதில் ஆயிரத்து ஒருகூறு வலியையுடைத்தாய் அறிவை விளக்குவது ஞானசத்தி எனப்படும். அதில் ஆயிரத்து ஒருகூறு வலியை

யுடைத்தாய்ப் பஞ்சகிருத்தியத்தை நடத்துவது கிரியாசத்தி எனப் படும். பஞ்சகிருத்தியங்களைத் திருவுள்ளத்தடைத்த பரமசிவனுக்கு இவ்வைந்தும் சத்திகளாம் என்க.

4. இவ்வகைச் சத்தி இயம்பிய ஐந்தும்
செவ்விய உண்மைச் சிவன்படைப் பாகும்.

(இ–ள்) இப் பஞ்ச சத்திகளும் பரமசிவனுடைய பிரேரகம் ஆகிய நிட்களமாய் இருக்கும் என்க.

5. சத்தி படைப்பினில் ஒத்துரை செய்யில்
யோகிகள் அதிதிகள் ஞானிகள் இவர்கள்
ஆகிய தியானத் தளவிடற் பொருட்டாய்
நிட்களம் அதனில் சகளம் நிறைந்திடும்
அப்பெயர் சாதாக் கியமெனல் ஆகும்.

(இ–ள்) இனி, சத்தி பிரேரகத்தைப் பொருந்தச் சொல்லில் சீவன் முத்தர்க்கும், விரத்தராய சாதகர்க்கும், ஞானிகட்கும், அவரவர்க்கேற்ற தியானத்தில் அளவிடுதல் நிமித்தமாக அவிகாரமான நிட்களத்திலே சத்திவிகற்பமான கலைகளாலே தியானமூர்த்தியாக நிரம்புவதே சாதாக்கியம் ஆம் என்க.

6. சாதாக் கியவகை தாம்சிவம் அமூர்த்தி
மூர்த்தி கருத்தா கருமம் எனஐந்
தோதிய பரைமுதல் ஐந்திலுற் பவமே.

(இ–ள்) சிவசாதாக்கியம் பராசத்தியிலும், அமூர்த்தி சாதாக் கியம் ஆதிசத்தியிலும், மூர்த்தி சாதாக்கியம் இச்சாசத்தியிலும், கர்த்திரு சாதாக்கியம் ஞானசத்தியிலும், கன்மசாதாக்கியம் கிரியா சத்தியிலும் ஆகப் பஞ்ச சாதாக்கியம் முன்சொன்ன பஞ்ச சத்திகளி டமாகத்தோன்றும் என்க.

7. எண்ணு சதாசிவன் ஈசன் பிரமனும்
ஒண்ணெறி ஈசுரன் உயர்ஈ சானனும்
தந்துரை சிவசா தாக்கிய முதலிவ்
ஐந்தினுக் கைந்தாம் அதிபர்கள் இவரே.

*(இ-ள்) எண்ணுமிடத்துச் சதாசிவன், ஈசன், பிரமீசன், நன்னெறியைத்தரும் ஈசுரன், மேலாகிய ஈசானன் இவர்கள் ஐவரும் உரைதந்த சிவசாதாக்கியம் முதலான பஞ்சசாதாக்கியமும் அதிகதமாக அடைந்துள்ள மூர்த்திகளாம். இவர்கள் சாதாக்கியங்களை அந்தர்க்கதமாக உள்ளே பாவித்து வழிபட்டிருக்கையால் அதிபர் ஆவர் என்க.*

8. பராபர மேபரம் சூக்குமா சூக்குமம்
சூக்குமம் தூலம் தூலம் சிவசா
தாக்கிய முதலிவ் வைந்தின் தன்மை.

*(இ-ள்) பரைக்குப் பரமாயிருப்பது சிவசாதாக்கியம்; பரையுடன் கூடிக் கிருத்தியத்தில் உத்தியோகத்தையுடையது அமூர்த்தி சாதாக்கியம்; சூக்குமமாகிய இச்சா ஞானக்கிரியைகளுக்கும் அப்பாற்பட்டுள்ளது மூர்த்தி சாதாக்கியம்; சூக்குமமான இச்சையிலே தூலமான ஞானக்கிரியைகள் பொருந்தி ஞானபாவகமாய் உள்ளது கர்த்திரு சாதாக்கியம்; தூலமான விந்து நாதங்கள் கூடியுள்ளது கருமசாதாக்கியம் ஆம். காட்டத்தில் தோன்றின அக்கினி காட்டத்துக்கு மேற்பட்டிருந்தாற்போலச் சத்திகளில் தோன்றின சாதாக்கியங்களும் சத்திகளுக்கு மேற்பட்டிருக்கும். அக்கினிக்குக் காட்டம் உபாதானம் அல்லாததுபோல, சாதாக்கியத்துக்குச் சத்தி உபாதானம் அல்ல என்க.*

9. தத்துவ மூர்த்தி தகும்பிர பாவமென்
றித்தகை மூன்ருய் இயைந்திடும் இவையே
சிவசா தாக்கியம் முதலிய தத்துவம்
அவமில் சதாசிவம் முதலேம் மூர்த்திகள்
ஒன்றிய போதீ சாஞ திகளாய்
நின்றன முறைநிரல் நிறைபிர பாவம்.

(இ-ள்) தத்துவம் என்றும், மூர்த்தி என்றும், பொருந்திய பிரபாவம் என்றும் மூன்று வகையான தகைமைப்பாட்டால் இசையச் சொல்லப்படும். இவையே சிவசாதாக்கியம் என்னும் தத்துவமும் சதாசிவம் என்னும் மூர்த்தியும் பொருந்தினது ஈசானம். அமூர்த்தி சாதாக்கியம் என்னும் தத்துவமும் ஈசன் என்னும் மூர்த்தியும் பொருந்தினது சத்தியோசாதம். மூர்த்திசாதாக்கியம் என்னும் தத்துவமும் பிரமீசன் என்னும் மூர்த்தியும் பொருந்தினது வாமதேவம். கர்த்திருசாதாக்கியம் என்னும் தத்துவமும் ஈசானன் என்னும் மூர்த்தியும் பொருந்தினது தற்புருடம். மூர்த்திமான்கள் ஒப்பைப் பிரபாவம் என்பர் என்க.

10. தத்துவ நிட்களம் சகள மூர்த்திகள்
இப்பிர பாவம் சகலநிட் களமே
தத்துவம் உயிரெனத் தகுமூர்த் திகளுடல்
அப்பிர பாவம் உடலுயிர் எனுமே.

(இ-ள்) சிவசாதாக்கியம் முதல் ஐந்தும் நிட்களமாய்த் தேக ஆம். சதாசிவம் முதல் ஐந்தும் சகளமாய்த் தேகமாம். இவைகளோ ஒப்பான ஈசானாதிகள் ஐந்தும் சகளநிட்களமாய் உடலுயிராம் என்று சொல்லப்படும் என்க.

11. பரைமுதல் ஐந்திற் பத்திலோர் பங்காய்
நிரல்நிறை யாக நிகழ்ந்து பிரிந்தன
அருள்சிவ சாதாக் கியமுதல் ஐந்தே.

(இ-ள்) பராசத்தி முதலான ஐந்திலும் பத்தில் ஒருகூறு வலியையுடைய சிவசாதாக்கியம் முதல் ஐந்தும் அநுக்கிரக காரியமாக அடைவாய்ப் பிரிந்தது என்க.

இனி, சாதாக்கியங்களின் நாமரூபங்களைச் சொல்லில் :—

12. சிவசா தாக்கியம் என்ற திருப்பெயர்
உவமையில் சுத்த மாயையில் உண்டாய்
அதிசூக் குமமாய் அளவறும் ஒளியாய்

விதமிகும் அபரம் மின்னின் விளங்கி
விதமுற எங்கும் வியாபித் திடுமே
சாரும் அமூர்த்தி சாதாக் கியமென்
றோதிய ரூபை ஆதலிற் பெயராய்க்
கலைகடந் தொருலிங் காதா ரமதாய்த்
தொலைவில் கோடி சூரியர் ஒளியாய்த்
தூணம தாகிச் சோதியி னூடே
காணரும் அந்தர்க் கதமூர்த் தியதாய்
மேலைத் திவ்விய லிங்கம் எனவும்
மூலத் தம்பம் எனவும் மொழிந்தனர்
எச்சமில் மூர்த்தி சாதாக் கியமென்
றிச்சை குணத்துடன் எய்தலின் எய்திக்
கலையை அணுகலிற் காணும் உருத்தரித்
தெரிதழற் பிழம்பாம் இலிங்கம துருவாய்
உச்சியில் ஒருதிரு முகமும் அம்முகத்
தச்சமில் முக்கணு மாயிருப் பதுவே
கர்த்திரு சாதாக் கியப்பெயர் ஞானமென்
றத்தன் எழிற்பெயர் ஆதலி னாலும்
ஞான சத்தி இலகுத லாலும்
ஊனமில் மறைகள் உரைத்திடும் அதுதான்
சுத்தம் ஆதலிற் றூய்பளிங் கொளியாய்
இத்தகு திவ்விய லிங்கமு மாயதின்
மத்தியில் நாலு முகத்தொடு மன்னி
நலமிகு பன்னிரு நயனம் உடைத்தாய்
வலதுகை சூலம் மழுவாள் அபயம்
இடதுகை நாகம் இலங்கிய பாசம்
படுமணி வரதம் எனும்படை ஏந்தி
ஒடிவில் இலக்கண முடனிருப் பதுவே
கன்ம சாதாக் கியகா ரணப்பெயர்
தொன்மைக் கிரியையில் தோன்றலில் உடைத்தாம்
நாத மயமெனும் நவிலும் இலிங்கமும்
பேதமில் விந்து மயமாம் பீடமும்
சோர்வறக் கூடித் தொழிற்பட் டிருக்கும்.

(இ–ள்) சாந்தியதீதை என்னும் பெயருடைய உவமையற்ற பராசத்தி சுத்தமாதலால் சுத்தமான சிவம் என்னும் பெயரை யுடைத்தாய், கரணவியாதிக்கு எட்டாத அதிசூக்குமமாய், அளவு படாத பிரகாசமாய், பார்த்த இடமெல்லாம் தான் ஆகி, மிகுந்த விதப்பட்ட ஆகாசத்தின் மின்போல அரூபத்திலே தியானத்தால் விளங்கப்பட்டு, சர்வ வியாபியாய் இருப்பது சிவசாதாக்கியம். இது லயத்தானம் என்று சொல்லப்படும். சாந்தி என்னும் பெயரை யுடைய ஆதிசத்தி அரூபி ஆதலால் அமூர்த்தி என்னும் பெயரை யுடைத்தாய், வடிவு அறுதி ஆதலால் விகற்பமான கலைகளுக்கு அப்பாற்பட்டுத் தாணுகாரமான ஒப்பற்ற இலிங்கமாய், குன்றாத கோடிசூரியப்பிரகாசத்தையுடைய இலிங்கத்தின் நடுவே காண்டற் கரிய வடிவைக்கற்பித்திருப்பது அமூர்த்தி சாதாக்கியம். இது திவ்விய இலிங்கம் என்றும், மூலத்தம்பம் என்றும் சொல்லப்படும். இவ் விலிங்கத்திலேயே சிருட்டி சங்கார காலத்தில் தோற்றமும் ஒடுக் கமும் உண்டாவது. இலிங்–லயம், கம்–தோற்றம். வித்தை என் னும் பெயரையுடைய இச்சாசத்தி சுத்தகுணமான கலையைப் பொருந்துதலால் குற்றமற்ற மூர்த்தி என்னும் பெயரையுடைத்தாகி, காணப்பட்ட வடிவையும் உடைத்தாகி, காலாக்கினிக்கு ஒத்த பிர காசத்தையும் உடைத்தாகி, இலிங்க வடிவாகி, அதனுடைய ஊர்த் துவத்திலே ஒப்பற்ற ஒருதிருமுகம், குற்றமற்ற இச்சாஞானக்கிரி யைகள் ஆகிய திருநயனங்கள் மூன்றும் கண்டிப்பற்ற வடிவும் உடைத்தாய் இருப்பது மூர்த்தி சாதாக்கியம். இதற்கு இலிங்க மூர்த்தி என்று பெயர். பிரதிட்டை என்னும் பெயருடைய ஞான சத்தி கர்த்தாவுக்கு அழகிய குணம் என்னும் சுபாவம் ஆதலாலும், அந்த ஞானசத்தியிலே தோற்றுகையாலும் கர்த்திரு என்னும் பெய ரையுடைத்தாய்ச், சுத்தம் ஆகையால் தூய்ய படிகப்பிரகாசமான திவ்விய இலிங்கமுமாய், அதன் உச்சியிலே நாலு திருமுகமும் நன்மை மிகுந்த பன்னிரண்டு திருநயனங்களும் உடைத்தாய், வலத் திலே சூலம் மழு வாள் அபயம், இடத்திலே பாம்பு விளங்கிய பாசம் உண்டாக்கப்பட்ட மணி வரதம் என்னும் ஆயுதங்களைத் தரித்துத்

குறைவில்லாத இலக்கணங்களுடன் கூடியிருப்பது கர்த்திரு சாதாக்கியம். இதற்கு ஞானலிங்கம் என்று பெயர். நிவிர்த்தி என்னும் பெயரையுடைய தொழில் ஆகையாலும், பழமையாய் இந்தச் சத்தியிலே தோற்றுகையாலும், தொழில் என்னும் காரணப்பெயரையுடைத்தாய், நாதமயம் என்று சொல்லப்பட்ட ஞானலிங்கமும் பேதமில்லாத விந்துமயமான கிரியாபீடமும் ஏறுமல் குறையாமல் கூடி, பஞ்சகிருத்தியம் என்னும் தொழிலை உடையது கன்மசாதாக்கியம். இது கிரியாலிங்கம் என்றும், அதிகாரத்தாணம் என்றும் சொல்லப்படும் என்க.

இனி, ஞானக்கிரியைகள் என்னும் நாதவிந்துக்களுடைய கூட்டத்திற் பொருந்தும் தொழிலை விளங்கச் சொல்லுமிடத்து:-

13. கர்த்திரு சாதாக் கியமுதல் நாலும்
வைத்திடு நாத மயமெனத் தகுமே
நிவிர்த்தி முதலாய் நிகழ்கலை சத்திகள்
வியப்புறு நாலும் விந்து மயமே
இன்ன பீட லிங்கம் இரண்டற
அந்நிலை கூடிய அவதரம் தன்னில்
முன்னுரை நிவிர்த்தி முதல்நாற் கலையென
மன்னிய விந்து மயமாம் பீடம்
தன்னின் நடுவே தகும்இந் திகைமுதல்
அரன்தரு நாத கலைகளோ ரைந்தும்
திரண்ட அவதரம் தீதறு நாதம்
இன்ன நாத மயமெனும் இலிங்கம்
தன்னில் நடுவே சதாசிவன் ஈசன்
பிரமன் ஈசுரன் பேரீ சானன்
என்னும் ஐம்மூர்த் திகளிடம் தனிலுயர்
சிவசா தாக்கியம் முதலைந் தாசற
மிச்சிர மித்திடும் அவதரத் தீசா
ஞதிகள் முகபந் தியதாம் அவிர்சா
தாக்கியம் ஐந்தும் திரண்ட அவதரம்
கன்ம சாதாக் கியரா கும்மே.

(இ–ள்) கர்த்திருசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவசாதாக்கியம் இவை நாலும் நாதத்தில் தொழிலறுதி, கன்மசாதாக்கியம் தொழில், நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி என்னும் சத்திகள் நாலும் விந்துவிற் றொழில், சாந்தியாதீதை தொழில் அறுதி என்று சொல்லப்படும். சொல்லிய தொழிலான நிவிர்த்தியாதிபீடமும் தொழிலறுதியான கர்த்திருமுதலான லிங்கமும், கன்மசாதாக்கியமான லிங்கமும் சாந்தியாதீதையான பீடமும் தம்மில் ஒத்த இடத்திலே முன் சொன்ன ஆதிமுதல் நாலு சத்திகளும் பிரேரிக்கப்பட்ட வயிந்தவமான சாந்தியாதி நாலும் தம் தொழிலை உள்ளடக்கித்திரண்டிருக்கும் குடிலை என்னும் பீடத்தின் மேல் தகைமைப்பாட்டால் வியாபினி முதலான சத்திகளால் பிரேரிக்கப்பட்ட இந்திகை ஆதியாய்க் காவலான நாதகலைகள் ஐந்தும் பொருந்தின இடம் நீதற்ற நாதமான லிங்கம். இந்த நாதமயமான லிங்கத்தின் மேல் நடு மேற்கு வடக்குத் தெற்குக் கிழக்கு என்னும் திசைகளிலே இருக்கும் சதாசிவன் ஈசன் பிரமன் ஈசுரன் மேலாகிய ஈசானன் என்னும் ஐந்து மூர்த்திகளிடத்திலே மேன்மையான சாதாக்கியம் முதலான ஐந்தும் அலைவறப்பொருந்தி இருந்துள அவதாரத்தில் ஈசானுதியான முக ஒழுங்காக விளங்கியிருக்கும். சாதாக்கியம் ஐந்தும் ஒன்றாய்த்திரண்ட அவதாரம் கன்ம சாதாக்கியம் என்று சொல்லப்படும் என்க.

**14.** சிவசா தாக்கியம் சிவன்றனே ஆசரித்
தது முதல் ஒன்றை ஒன்று சரித்தலில்
அணிசா தாக்கியம் ஐந்தும் திரண்டது
தணிவில் கரும சாதாக் கியமே
ஈனமில் பொருள்கள் எவைக்குமா தாரம்
தானே கரும சாதாக் கியமே.

(இ–ள்) சிவசாதாக்கியம் பரமசிவத்தையும், அமூர்த்தி சாதாக்கியம் சிவசாதாக்கியத்தையும், மூர்த்திசாதாக்கியம் அமூர்த்தி சாதாக்கியத்தையும், கர்த்திரு சாதாக்கியம் மூர்த்தி சாதாக்கியத்

*தையும், கன்மசாதாக்கியம் கர்த்திரு சாதாக்கியத்தையும் ஆசரித்திருப்பதால் அழகிய சாதாக்கியம் ஐந்தும் கெடாமல் திரண்டது கன்மசாதாக்கியம். அழியாத எல்லாப்பொருள்களுக்கும் தான் ஆதாரமாய் அழியும் பொருளை அதிட்டிப்பித்தலால் கன்மசாதாக்கியம் எனப்படும் என்க.*

## இந்தக் கன்மசாதாக்கியம் திரண்ட திரட்சியைச் சொல்லில் :—

15. சாற்றிய கரும சாதாக் கியந்தான்
மூர்த்தி வடிவாய் முளைத்ததி னாலும்
பிண்டம் என்று பெயர்பெறு கின்ற
அண்ட சராசர வியாபகத் தாலும்
பிண்டம் என்பது பீடப் பெயராய்
எண்டகு வாதன மீதிருக் கையினால்
அதுவே திருவடி வாகையி னாலும்
திண்டிறல் அருவுருத் திரண்டமை யாலும்
பிண்டா காயம் எனப்பெயர் பெறுமே.

(இ-ள்) *சொல்லப்பட்ட கன்மசாதாக்கியம் பஞ்சமூர்த்திகளுடைய ஒன்றுதலினால் உண்டாகையாலும், அண்டத்திலே பிண்டம் என்று சொல்லப்பட்டு நின்று சஞ்சரித்துள்ள ஆன்மவர்க்கங்கட்கு உயிராய் நிற்கையாலும், பிண்டிகை என்னும் பெயரையுடைய பீடத்தின்மேலே சொல்லும் தகைமைப் பாட்டிலே எழுந்தருளியிருக்கையினாலும், பிண்டமான சத்திதானே திருமேனியாகையினாலும், திண்மையையுடைய நிட்களமும் வீரப்பாட்டையுடைய சகளமும் கூடித்திரண்டு ஒன்றானதாகையினாலும் பிண்டம் என்னும் பெயரையுடைய திருமேனியாய் இருக்கும் என்க.*

16. சுத்த காரண தத்துவத் தொகையும்
அசுத்த காரிய தத்துவம் அனைத்தும்
சென்று கன்ம சாதாக் கியத்தினை
என்றும் ஆசரித் திருப்பது துணிவே.

(இ–ள்) காரணமாய்ச் சுத்தமாயுள்ள தத்துவத்தின் கூட்டமும், காரியமாய் அசுத்தமாய் உள்ள தத்துவத்தின் திரட்சியும் சூழப்பட்டுத் தங்கள் தொழிலுக்கு அதீதமான கன்மசாதாக்கியத்தை இடைவிடாமல் சந்தேகமற ஆசரித்திருக்கும் என்க.

17. தந்துரை சுத்த தத்துவம் இயம்பின்.

(இ–ள்) உரைதரப்பட்ட சுத்ததத்துவத்தின் பொருளாகிய அபரவிந்து அபரநாதம் பரவிந்து பரநாதம் இவை நான்கினுமிருந்து சுத்தபஞ்சகிருத்தியத்தைப்பண்ணும் சதாசிவத்தினுடைய வியாத்தி வியாப்பியங்களைச் சொல்லின் என்க.

18. முந்துரை நிவிர்த்தி முதலிய அபர
விந்து கலையென விளம்பிய ஐந்தே.

(இ–ள்) உரைமுந்தின நிவிர்த்தி முதலாகச் சொல்லப்பட்ட கலை ஐந்தும் அபரவிந்து விகற்பமான பஞ்சகலைகள் என்பதாம் என்க.

19. இந்திகை தீபிகை ரோசிகை மோசிகை
கருதிய ஊர்த்துவ காமினி என்னும்
அபர நாத கலையிவை ஐந்தே.

(இ–ள்) இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, கிருத்தியத்தைக் கருதிய ஊர்த்துவகாமினி என்னும் ஐந்தும் அபரநாதத்தின் கலைகள் என்பதாம் என்க.

20. சுழுமுனை பிங்கலை சொல்லிடை யுலகம்
முழுதும் காட்டிய நாடிகள் மூன்றே.

(இ–ள்) பிரபஞ்சத்தைக் கெடாமல் அதிட்டித்து நிற்கும் இச்சா ஞானக் கிரியை என்று சொல்லப்பட்ட சுழுமுனை பிங்கலை இடை இவை மூன்றும் நாடியாய் நின்று நாதம் முதல் பிருதிவி அளவும் உள்ள அடுக்குகளைக் குலையாமல் பந்தித்து நிற்கும் என்க.

21. சூக்குமை நல்ல சூக்குமை மிர்தை
மீக்கொள் அமிர்தை வியாபினி யேபரம்
ஆகிய விந்து கலையிவை ஐந்தே.

*(இ-ள்) சூக்குமை, அதிசூக்குமை, மிருதை, அமிருதை, வியாபினி ஆகிய இவைகள் ஐந்தும் பரவிந்துபேதமாய் அபரவிந்துவை அதிட்டித்துநிற்கும் கலைகளாம் என்க.*

22. காரண வியாபினி வியோம ரூபை
அநந்தை அநாதை அநாசிருதை தான்பரம்
கலந்த நாத கலையிவை ஐந்தே.

*(இ-ள்) அழியாத வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை ஆகிய இவைகள் ஐந்தும் பரநாதபேதமாய் அபரநாதத்தை நடத்தும் கலைகள். இந்தப் பரவிந்தும் பரநாதமும் சத்தி சிவான்மிகமாய் இருந்து அபரவிந்து அபரநாதத்தை நடத்தும் என்க.*

23. பரசிவம் நூற்றுப் பத்திலோர் பங்காம்
அவதரம் அநாசிருதர் அவர்நா மத்தினில்
அமரும் சத்தி அநாசிருதை யாகும்
அநாசிருதர் பரமர் அநாசிருதை பரையாம்
அநாசிருதர் கரணம் அநாசிருதை ஆகும்
அநாதர் முதலா அமைவுறு நால்வரும்
அநாசிருதை முதலருட் சத்திகள் தம்மோ
டிணைந்து சேவித் தீரிரு திசையினும்
அணைந்திருந் தேத்துவர் அநாசிருதர் தமையே.

*(இ-ள்) பரசிவத்தில் ஆயிரத்து ஒரு கூறு வலிமையுடைய அவதரம் அதிட்டிகையால் பரன் என்னும் பெயர் பெற்றுத் தான் ஒருவரை ஆசரியாதபடியால் அநாசிருதராய் தமக்கு அவதரமான பரையும் அநாசிருதையானது. இவரைக் கிழக்கு தெற்கு வடக்கு மேற்கு என்னும் திசையிலே அநாதர் அநந்தர் வியோமரூபர் வியாபகர் என்னும் இவர்கள் நால்வரும் அநாதை அநந்தை வியோமரூபை*

*வியாபினி என்னும் அநுக்கிரகசத்திகளோடே கூடி அநாசிருதரைத் தோத்திரம் பண்ணிக் கொண்டிருப்பார்கள் என்க.*

24. அநாதை அநாதர் கரணம தெனவும்
விளுவுடன் கிரியை எனவும் விளம்புவர்
அநந்தை அநந்தர் கரணம தாகும்
இனந்தரு ஞான சத்தியும் என்பர்
வியோம ரூபை வியோம ரூபர்க்
கியாவரும் கரணம் என்பர் இதன்றியும்
தயாமிகும் இச்சா சத்தியும் ஆகும்
வியாபினி தன்னை வியாபகர் கரணம்
மியாமகிழ் ஆதி திரோபவம் என்பர்
அநாதை முதலோர் ஐவரை அதீதை
முளுவுணர் ஐங்கலை எனவுணர் முறையே.

(இ-ள்) *அநாதை என்னும் சத்தி அநாதருக்குக் காரணமுமாய், கிரியாசத்தியும் ஆம் என்று சொல்லுவார்கள். அநந்தை என்னும் சத்தி அநந்தருக்குக் காரணமுமாய், அறிவைத்தரும் ஞானசத்தியும் ஆம் என்று விளம்புவார்கள். வியோமரூபை என்னும் சத்தி வியோம ரூபருக்குக் காரணமுமாய், கிருபை மிகுந்த இச்சாசத்தியும் ஆம் என்று உரைப்பார்கள். வியாபினி என்னும் சத்தி வியாபகருக்குக் காரணமுமாய், ஆன்ம அநுக்கிரகமான ஆதிசத்தியும் ஆம் என்றும் திரோதான சத்தியுமாம் என்றும் ஓதுவார்கள். அநாசிருதை முதலான பஞ்ச சத்திகளும் சாந்தியாதீதை முதலான கலைகளைப் பிரேரிக்கையால் அநாசிருதை முதலான சத்திகள் ஐந்தையும் பஞ்சகலைகள் என்று மொழிவார்கள் என்க.*

25. அநாசிருதர் தம்மோ டநாதர் அநந்தர்
வியோம ரூபர் வியாபகர் சுத்தம்
என்றுயர் ஐந்தொழில் உற்று நடத்தலிற்
சகத்திவர் காரிய மான சதாசிவர்
வகுத்திடும் ஐந்து முகத்தொடு மன்னி
அசுத்த ஐந்தொழில் அவைபண் ணுவரே.

(இ—ள்) அநாசிருதர் அநாதர் அநந்தர் வியோமரூபர் வியாபகர் என்னும் இவர்கள், பரை கிரியை ஞானம் இச்சை ஆதி என்னும் பஞ்ச சத்திகளைக்கொண்டு சிவசாதாக்கியம் கன்மசாதாக்கியம் கர்த்திருசாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியம் என்னும் இவைகளை உண்டாக்கி ஒன்றுவிக்குமதான சுத்தபஞ்ச கிருத்தியத்தை நடத்துகையால் இந்த அநாசிருதருடைய அவதாரியம் என்னும் கன்மசாதாக்கியருக்குச் சுத்தா சுத்த பஞ்சகிருத்தியத்தின் தொழில்தானே ஐந்துமுகம் ஆதலால், இத்தொழிலாகிய முகத்துடனே கூடிப் பிரபஞ்சத்தில் அசுத்த பஞ்சகிருத்தியத்தை நடத்துவர் என்க.

**26.** சமனை உன்மனை தம்மில் இரண்டற
அமையும் அவதரம் அநாசிதர் தாமே.

(இ—ள்) சமனை என்னும் பரையும், உன்மனை என்னும் பரமும் தம்மில் கூடி ஆன்மாக்களைத் திருவுள்ளத்தடைத்த அவதாரம் அநாசிருதர் என்பதாம் என்க.

**27.** அநாசிதர் முதலோர் ஐவர் வியாத்தி
அளவை உரைக்கின் அயன்மால் உருத்திரன்
ஏயும் மகேசன் சதாசிவன் என்றிவர்
ஆகி நிரனிறை ஐவரும் ஆகும்.

(இ—ள்) அநாசிருதருக்குப் பிரமன் அளவாகவும், அநாதருக்கு விஷ்ணு அளவாகவும், அநந்தருக்கு உருத்திரன் அளவாகவும், வியோமரூபருக்கு மகேசுரன் அளவாகவும், வியாபகருக்குச் சதாசிவன் அளவாகவும் வியாத்தியாம் என்க.

**28.** பீடு நீடு வியாபகர் பிரிவாம்
ஆட கேசர் அவர்பா தலமேழ்
ஈடுற அதிட்டித் தினிதிருந் தனரே.

(இ—ள்) பெருமை பொருந்திய வியாபகருடைய 'மூர்த்திபேத

*மான ஆடகேசுரர் சத்தபாதாளங்களைத் தமது ஆக்கினையால் நடத்தி அவ்விடத்தில் இனிமையுடன் எழுந்தருளியிருப்பர் என்க.*

29. உய்த்த வியோம ரூபர் பிரிவாம்
அத்தர் கூர்ம வாண்ட ரவர்தாம்
எழுநாற் கோடி இருள்தரு நரகமும்
அழியா ததிட்டித் தாங்கிருந் தனரே.

(இ–ள்) *மோட்சத்தைப் பிரசாதிக்கும் வியோமரூபருடைய மூர்த்திபேதமான கூர்மாண்டதேவ நாயனார் அந்தகாரமான இருபத்தெட்டுக் கோடி நரகமும் கெடாமல் அதிட்டித்து அவ்விடத்தில் எழுந்தருளியிருப்பர் என்க.*

30. ஆலும் மறைதேர் அநந்தர் பிரிவாம்
கால அனலக் கடவுள் உருத்திர
ஞாலம் என்று நவில்பிர மாண்டம்
சால அளிக்கும் தயாபதி ஆகும்.

(இ–ள்) *ஒலிக்கும் வேதங்களால் விசாரிக்கப்பட்ட அநந்தருடைய மூர்த்திபேதமான காலாக்கினிருத்திர தேவர் பிருதிவி என்று சொல்லப்பட்ட பிரமாண்டத்தை மிகுந்த கிருபையுடனே கூடி அதிட்டித்து எழுந்தருளியிருப்பர் என்க.*

31. அநாதர் பிரிவாம் ஆதா ரங்களைத்
தனுமிசை அண்டம் சுமந்திருப் பதுவே.

(இ–ள்) *அநாதருடைய மூர்த்திபேதமான ஆதாரசத்தி, நெருங்கிய அண்டங்களைத் தனது உச்சியினால் சுமந்து எழுந்தருளியிருக்கும் என்க.*

32. அநாசிதர் வடிவில் பிரிந்திடும் அநந்தர்
குறித்திடும் ஆதா ரத்தொடு கூடி
அசுத்த மாயையை அதிட்டிப் பவரே.

(இ–ள்) அநாதருடைய மூர்த்தி பேதமான அநந்தேசுரர் முன் சொன்ன ஆதாரசத்தியுடனே கூடி அசுத்தமாயையைப் பிரேரித்துக்கொண்டிருப்பர் என்க.

33. இப்படிச் சுத்த தத்துவம் யாவும்
வைப்புறு நாத மயலிங் கத்தினைத்
தப்பற ஆசரித் திருப்பது தானே.

(இ–ள்) இப்படி வியாத்தி வியாபகங்களையுடைய மேலாகிய தொழிலான சுத்ததத்துவங்கள் எல்லாம் நாதமயமாகிய மேலேபருக உள்ள இலிங்கத்தை விடாமல் ஆசரித்திருக்கும் என்க.

34. அசுத்த தத்துவ அடைவினை அமலன்
இசைத்திடும் ஐந்தொழில் இயம்புவம் இனியே
அந்த அநாசிதர் காரியம் ஆகிய
முந்து சதாசிவர் ஐந்தவ தரமாய்
அயன்நெடு மாலுடன் அந்த உருத்திரன்
இயலும் மகேசர் சதாசிவர் என்றிவர்
தம்மை அதிட்டித் திவர்கள் தமைக்கொண்
டம்முறை அசுத்த ஐந்தொழில் நடத்துவர்.

(இ–ள்) நின்மலசிவன், அசுத்த தத்துவங்களை நடத்துவதான பஞ்சகிருத்தியங்களை மேற் சொல்லுமிடத்து, முன்னே அநாசிருதருடைய காரியமாகச் சொன்ன சதாசிவ நாயனார் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகம் என்னும் ஐந்தொழில்களை நடத்தும் அவர் சத்தியும் ஐந்து அவதாரம் ஆகையால் இந்தச் சத்தியுடன் கூடி நின்று பிரமன் விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்றிவர்களைக் கொண்டு முறையே அசுத்தபஞ்ச கிருத்தியங்களை நடத்துவர் என்க.

35. தீர அசுத்தத் தைந்தொழில் செய்யும்
காரண வியாத்தி கழறுவம் இனியே.

(இ–ள்) வேறு அசுத்த பஞ்சகிருத்தியங்களைப் பண்ணும் காரணேசுரர் வியாத்தியை மேற்சொல்லுவோம் என்க.

36. அவனி அதிட்டித் தறுநாற் றத்துவம்
அதனில் வியாபித் திருப்பவன் அயனே.

(இ–ள்) பிருதிவிபூதத்தை அதிட்டித்துப் பிரமாண்டத்திலிருந்து ஊர்த்துவ வியாத்தியாக ஆன்மதத்துவம் இருபத்துநாலிலும் வியாபித்திருப்பவன் பிரமன் என்க.

37. அப்புவை அதிட்டித் தாய பிரகிருதி
ஒப்பில் உபாதா னத்தொடும் கூடிப்
படிமுதல் மாயை முடிவுமுப் பத்தொன்
றடைவுற வியாபிப் பவனடல் அரியே.

(இ–ள்) அப்புபூதத்தை அதிட்டித்து இணையில்லாத பிரகிருதி என்னும் உபாதானத்திலிருந்து பிருதிவிமுதல் பிரகிருதி அளவாகச் சுதந்திரமாக நடத்தி வித்தியாதத்துவம் ஏழும் ஆன்மதத்துவத்திலே காரியப்படுகையால் மாயை முடிவான ஏழிலும் வியாபித்துச் சொல்லிய முறையே முப்பத்தொருதத்துவத்திலும் சமவியாத்தியாக வியாபித்திருப்பவன் வெற்றிப்பாட்டையுடைய விஷ்ணு ஆம் என்க.

38. ஆய தீயை அதிட்டித் தளவறு
மாயை உபாதா னத்தொடு மன்னி
மாயை முதலா மண்முடி வாக
மூய தத்துவம் முப்பத் தொன்றிலும்
மேய வியாபித் திடுமுருத் திரனே.

(இ–ள்) தேயுபூதத்தை அதிட்டித்து அளவிடுதற்கரிய காரணமாயை என்னும் உபாதானத்திலிருந்து மாயை முதல் பிருதிவி முடிவான நெருங்கின முப்பத்தொரு தத்துவத்திலும் பொருந்த அதோ வியாத்தியாக வியாபித்திருப்பவன் உருத்திரன் ஆம் என்க.

39. வாயுவை மாயா வகையதிட் டித்துத்
தூய வித்தை உபாதா னத்துடன்
ஆய மாயை யாதிமண் அளவாம்
சேய தத்துவம் ஆணையிற் செலுத்திச்
சுத்த வித்தை தொடர்ந்த மகேசம்
மொய்த்த சதாசிவம் மூன்றுதத் துவத்திலும்
ஒத்து வியாபித் துறையும் மகேசன்.

*(இ-ள்) வாயுபூதத்தை அழியாமல் அதிட்டித்து, சுத்த வித்தை என்னும் உபாதானத்திலேயிருந்து மாயைமுதல் பிருதிவி முடிவாக உள்ள தத்துவங்களைத் தமது ஆக்கினையாலே நடத்தி, சுத்த வித்தை அதற்கடுத்த மகேசுரம் அதை நெருக்கின சதாசிவம் என்னும் மூன்று தத்துவத்திலும் சமமாக சர்த்துவ வியாத்தியாக வியாபித்திருப்பவன் மகேசன் என்க.*

40. ஆகா யத்தை அதிட்டித் தருளால்
ஓதை விந்து உபாதா னத்துடன்
மாயை அடிமுடி மண்ணமர் தத்துவம்
மேய ஆணையி னாலே நடத்திச்
சுத்த வித்தை யொடுநா தாந்த
தத்துவம் ஐந்தினும் ஒத்து வியாபித்
துய்த்த சதாசிவன் ஓங்குவன் அன்றே.

*(இ-ள்) ஆகாயத்தை அதிட்டித்து கேசமாகிய அநுக்கிரக நிமித்தமாக விந்து என்னும் உபாதானத்திலேயிருந்து மாயை முதல் பிருதிவி முடிவாக அடைவே நிலைபெற்றுள்ள சுத்ததத்துவங்களைத் தமது ஆக்கினையினாலே பொருந்த நடத்தி, சுத்தவித்தை மகேசுரம் சாதாக்கியம் சத்தி சிவம் ஆன விந்து நாதம் என்னும் ஐந்து தத்துவத்திலும் சுதந்திரமாகச் சமவியாத்தியாய் வியாபித்து மோட்சத்தை ஏதுவாக்கும் சதாசிவநாயனார் எழுந்தருளியிருப்பர் என்க.*

41. ஐந்து காரணர் ஐம்பூ தத்தினும்
முந்த வியாபித் திருப்பரிம் முறையே.

*(இ-ள்) காரணேசுரர் ஐவரும் முதன்மையாகிய பஞ்சபூதத்திலே முறையே வியாபித்திருப்பார்கள் என்க.*

42. ஐங்கா ரணரையும் ஐந்து முகத்தினும்
தந்தனன் எம்மிறை தானதிட் டித்தே.

*(இ-ள்) எமது சுவாமியாகிய சிவன் காரணேசுரர் ஐவரையும் ஐந்தவதாரமாகப் பிரேரிக்கும் முறைமை எப்படி? என்னில்,—சத்தியோசாத முகத்தால் பிரமாவையும், வாமதேவ முகத்தால் விஷ்ணுவையும், அகோர முகத்தால் உருத்திரனையும், தற்புருட முகத்தால் மகேசுரனையும், ஈசான முகத்தால் சதாசிவனையும், கன்மசாதாக்கியர் என்னும் சதாசிவர் இம்முறையே அதிட்டித்தனர் என்க.*

43. சத்திய முதல்ஈ சானமொ டைந்தினும்
ஒத்தலௌ கீகம் ஓங்கிய வைதிகம்
அத்தியான் மிகம்அதி மார்க்கமந் திரமென்
றுய்த்த ஞானம் ஐந்துமுற் பவமே.

*(இ-ள்) சத்தியோசாதத்தில் லௌகிகஞானமும், வாமதேவத்தில் வைதிகஞானமும், அகோரத்தில் அத்தியான்மிக ஞானமும், தற்புருடத்தில் அதிமார்க்கஞானமும், ஈசானத்தில் மந்திர ஞானமும் தோன்றும் என்க.*

*லௌகிகமாவது—பரம்பரையான அறிவு. வைதிகமாவது—வேதம் சொல்லப்பட்ட பசுபுண்ணியமான போகாதிகளைக் கொடுக்கைக்குச் சாதனமான அறிவு. அத்தியான்மிகமாவது—அகம்புறம் என்னும் அறிவு. அதிமார்க்கமாவது—பரசமயங்களுக்கு அப்பாற்பட்டு உட்சமயமாகிய சித்தாந்தமல்லாத அறிவு. மந்திரமாவது—இரட்சிக்கும் தன்மையை உடைய மந்திரங்களைச் சாதித்து அநுக்கிரகங்களைப் பண்ணும் அறிவு. மன்—அறிகை. திரம்—இரட்சை.*

44. அறைந்திடு ஞானம் ஐந்தினும் அயன்முதல்
நிறைந்தனர் ஐவரு நிரல்நிறை வகையே.

*(இ-ள்) சொல்லப்பட்ட ஞானம் முதலான ஐந்திலும் பிரமன் முதலான தேவர்கள் ஐவரும் முறையே நிறைந்திருப்பார்கள் என்க.*

இனி, இச்சா ஞானக் கிரியைகளைச் சொல்லுகிறார்.

45. பரசிவன் இச்சை பாங்கில் சதாசிவம்
மருவிய ஞானம் மகேசம் கிரியை
விரிதரு சுத்த வித்தை ஆகும்.

*(இ-ள்) மேலாகிய சிவன் ஆன்மவருக்கத்தைத் திருவுளத்து அடைத்த இடத்தில் ஒப்பற்ற இச்சா ஞானக் கண்டிப்பு ஒப்பற்ற சதாசிவமாம். பொருந்தியஞானம் மகேசம் ஆம். ஆன்மாக்களுடைய பக்குவாபக்குவத்தை அறியும் தன்மையாகப் பொருந்திய தொழில் சுத்தவித்தையாம் என்க.*

46. கிளர்சிவன் இச்சையும் ஞானமும் கிரியையும்
வளமலி உருத்திரன் மலரோன் மாலென்
றிவர்தமை முறையே அதிட்டித் தனவே.

*(இ-ள்) பரமசிவனுடைய இச்சை உருத்திரனையும், ஞானம் பிரமனையும், கிரியை விஷ்ணுவையும் அதிட்டிக்கும் என்க.*

இனி, அம்மூர்த்திகளின் வியாத்தியைச் சொல்லுகிறார்:-

47. அயனுயர் தத்துவம் அனைத்தையும் அதிட்டித்
தியலும் பிரகிரு திக்கண் இருந்து
வித்தை ஏழினும் வியாபித் தனனே
வினவிய நெடுமால் வித்தை தத்துவம்
தனைஅதிட் டித்துச் சாதாக் கியமள
வினிது வியாபித் திருப்பவன் ஆகும்
உருத்திரர் தம்மை உயர்ந்தோன் இச்சை
அதிட்டிக் கையினல் அவர்சிவ தத்துவம்
ஒத்ததிட் டித்து வித்தை உயிரெனும்
தத்துவம் இரண்டினும் வியாபித் தனரே.

(இ–ள்) பிரமன் பிரகிருதியில் பொருந்தியிருந்து கீழ் ஆன்ம தத்துவம் இருபத்துநான்கையும் அதிட்டித்து, மேல் வித்தியாதத்துவம் ஏழினும் வியாபித்தனன். சொல்லும் விஷ்ணு புருடதத்துவத்திலிருந்து ஆன்மதத்துவத்தைக் காரியப் படுத்தும் வித்தியா தத்துவத்தினும் ஆன்மதத்துவத்தை அதிட்டித்து, மேல் சாதாக்கியம் அளவாக இனிமையுடன் வியாபித்திருந்தனன். உருத்திரரைப் பரமசிவனுடைய இச்சை அதிட்டிக்கையினாலும், அந்த வித்தியா தத்துவத்தை நடத்துகையினாலும், உருத்திரர் ஒக்கநின்று சிவதத்துவத்தை அதிட்டித்து, சுதந்திரமாக வித்தியாதத்துவத்திலும் ஆன்ம தத்துவத்திலும் வியாபித்தனர் என்க.

48. வனசனும் மாலும் லௌகிக வைதிகம்
எனுமிரு ஞானம் எய்தலின் இவர்க்குப்
பசுநெறி ஞானம் இயல்பெனப் படுமே.

(இ–ள்) பிரமனுக்கு லௌகிக ஞானமும், விஷ்ணுவுக்கு வைதிகஞானமும் சுபாவம் ஆகையால் இவர்கட்கு ஆன்மஞானமே இயல்பு என்க.

49. பயில்உருத் திரனைப் பரசிவன் எனலும்
அயனை மகேசன் எனலும் அரிதனை
இயலும் சதாசிவன் எனலு மாம்இவர்
இதமுறும் மாயை இலய போகம்
அதிகா ரம்செயும் அவரென மொழிப.

(இ–ள்) முன்சொன்ன உருத்திரனைப் பரசிவனுடைய இச்சை நடத்தலால் பரசிவன் என்றும், ஞானம் பிரமனைநடத்தலால் மகேசன் என்றும், கிரியை விஷ்ணுவை நடத்தலால் பஞ்சகிருத்திய மான தொழிலை நடத்தும் சதாசிவன் என்றும் சொல்லப்படும். இவர்கள் போகத்தைப் புசிக்கும் தானமாகிய அசுத்த மாயையிலே இலய போக அதிகாரங்களை நடத்துவார்கள் என்க.

50, சிவம்பயில் சத்தி சேட்டித் தலின்இவர்க்
கியம்பினம் வியாத்தி வியாபகம் இவையே.

*(இ-ள்) பிரம விஷ்ணு உருத்திரர்களைச் சிவசத்தி சேட்டிக் கையினால் இவர்கட்கு வியாத்தி வியாபகங்கள் இயம்பினம் என்க.*

51. மீதா க்கியமறை விளம்பிய கன்ம
சாதாக் கியர்எனும் சதாசிவக் கடவுள்
நிந்தையில் உயிரனுக் கிரக நிமித்தம்
ஐந்தொழில் திருவுளத் தடைத்த அவதரம்
முந்து மகேசம் எனமொழிந் ததுவே.

*(இ-ள்) மேலாகிய வேதம் சொல்லிய கன்ம சாதாக்கியம் என்னும் சதாசிவநாயனார் இச்சையுடன் ஆன்ம அநுக்கிரக நிமித்த மாகப் பஞ்ச கிருத்தியத்தைத் திருவுளத்து அடைத்து அநுக்கிரகிக் கும் அவதாரம் முன் சொன்ன மகேசுரம் என்க.*

52. ஈனமில் சதாசிவர் மகேசுரர் எனும் இவர்
ஆன வெளிகால் அதிட்டிப் பவரலர்
தூநெறி தருதத் துவங்களும் அலவே.

*(இ-ள்) முன்சொல்லிய சிவம், சதாசிவர், மகேசுரர் என்னும் மூவரில் சிவம் நீங்கலாகக் குற்றமில்லாத சதாசிவர் மகேசுரர் என் னும் இவர்கள் ஆகாயபூதத்தையும் வாயுபூதத்தையும் அதிட்டிக்கும் காரணேசுரரும் அல்லர். சுத்தமாகிய சதாசிவம் மகேசுரம் என்னும் தத்துவங்களும் அல்லர் என்க.*

53. தடுப்பரும் அந்தச் சதாசிவ முதல்வர்
கிடைத்திடு பஞ்ச கிருத்தியம் திருவுளத்
தடைத்து விருப்புறும் அவதரம் தனிலே
ஐவகைத் தொழிலாய் அமைவுறு சத்தி
மெய்வரு சுத்த வித்தை ஆகும்.

*(இ-ள்) முன்சொல்லிய தடைப்படாத சதாசிவநாயனார் தமக் குச் சுதந்திரமான கிருத்தியத்தை ஐவகையாகத்திருவுளத்தடைத்து*

*நடத்தும் மகேசுரமான அவதாரத்தில் சத்தியும் அதுவாக நின்று அந்தத் தொழிலை நடத்துகைக்குக் காரணமாக நின்ற அவதாரம் சுத்தவித்தை என்று பெயர் ஆனது என்க.*

54. இத்தகை வைத்திடு சுத்த வித்தை
தத்துவம் அலசிவ சத்தி எனத்தகும்.

(இ–ள்) *இத்தகைய சுத்தவித்தையைத் தத்துவம் என்னுமல் சிவசத்தி என்று சொல்லப்படும் என்க.*

55. உற்றிடும் அதுதான் உபாதா னமதாம்
மற்றதன் கருத்தா மகேசுர ராகும்.

(இ–ள்) *பொருந்திய அந்தச் சுத்தவித்தை சத்தி அநுக்கிரகத்தை நடத்துகையாலும், அதனிடமாக அநுக்கிரகம் பெறுகையாலும், அநுக்கிரக உபாதானம் பொருந்தியிருக்கும் அந்தச் சத்திக்குச் சத்திமான் மகேசுரர் என்க.*

56. விரிந்தஇச் சுத்த வித்தையும் மகேசமும்
தெரிந்துணர் சத்தி சிவான்மிக மாயிருந்
திருநூற் றிருபத் தீரிரு புவனத்
தொருவா துறையும் உயிரநுக் கிரகம்
இயற்றுதற் பொருட்டால் இந்த மகேசர்
இயற்படும் இச்சையில் ஏழு கோடி
போற்றுமந் திரர்களைத் தோற்றுவித் தனரே.

(இ–ள்) *விரிந்த சுத்தவித்தை மகேசுரம் இரண்டும் சத்தி சிவான்மிகமாய் இருந்து நடத்தும் அநுக்கிரகத் தொழிலை ஆராய்ந்தறியில் இந்த மகேசுரரது இயல்பான ஞானாநுக்கிரகம் என்னும் தொழிலாகிய இச்சையினால் அபர மந்திரேசுரரால் ஆசரிக்கப்பட்ட சத்தகோடி மந்திரங்களை அநுக்கிரகித்து, உண்டாக்கி, அவர்களைக் கொண்டு இருநூற்றிருபத்துநாலு புவனங்களிலும் மிகுந்த புண்ணியத்தால் அடைந்து, ஒழியாமல் இருந்துள்ள ஆன்ம அநுக்கிரகத்தை நடத்துவார்கள் என்க.*

ஆன்மார்த்தத்தில் இச்சை என்னும் பரசிவம், அதற்குக் காரணமான பரை, அநுக்கிரக இச்சையை நடத்தும் மகேசுரம், அநுக்கிரகத் தொழிலாகும் சுத்தவித்தை, காரண காரியமான வடிவறுதியும் வடிவும் ஒத்துப் பஞ்சகிருத்தியம் நடத்தும் சதாசிவம் என்னும் இவர்கள் அநுக்கிரகத் தொழிலைச் சொல்லில்:-

57. மேவுமிச் சுத்த வித்தை பக்குவ
ஆவிகட் குயர்சிவ ஞானம் அளிக்கும்.

*(இ-ள்) பொருந்திய சுத்தவித்தை கன்மம் நிலையாப்பான ஆன்மாக்களுக்கு நால்வகையான சத்தி நிபாதம் என்னும் தொழிலை நடத்தி மேலான சிவஞானத்துக்கு ஏதுவாகும் என்க.*

58. அளிக்கும் அவதரம் தன்னில் மகேசர்
வெளிப்படும் நாலு விதத்திரு மேனியோ
டளப்பரும் காட்சி கொடுத்தனுக் கட்குக்
கிளப்பரும் திறலனுக் கிரகம் பண்ணுவர்.

*(இ-ள்) ஞானத்துக்கு ஏதுவான அவதாரத்தில் ஆன்மாக்கள் பக்குவத்துக்கு ஈடாக மகேசுரர் பலவகைப்பட்ட திருமேனியுடனே வெளிப்பட்டுச், சொல்லுதற்கு அளவிறந்த காட்சியான பிறத்தியும் மேலான பதமுத்திகளைக் கொடுத்து இரட்சிப்பர் என்க.*

59. அழிவில் சதாசிவர் ஐந்தொழில் வகையால்
பழுதில் அநுக்கிர கம்பண் ணுவரே.

*(இ-ள்) நிலைபெற்றுள்ள சதாசிவர் போகநிவிர்த்தியைப் பண்ணி, சிவஞானத்துக்கு ஏதுவாகிய பதங்களில் வைத்து இரட்சித்து, அதிகார நிவிர்த்தி பிறந்தபோது அந்தப் பதத்தை அழித்து, அந்த வழியின் திகைப்பை மறைப்பாக்கி, அந்த மறைப்பை அருளாகிய கிரணத்தால் நீக்கி, தம்மைக் கொடுக்குமதான பஞ்சகிருத்தியம் என்னும் அநுக்கிரகத்தைப் பண்ணுவர் என்க.*

60. சொல்லிய பரைநற் சுத்தான் மாக்களுக்
கெல்லையில் திவ்விய ஞானத் தாலே
நல்லநுக் கிரகம் நயந்துபண் ணுவதே.

(இ–ள்) சொல்லப்பட்ட அருளாகும் பரை முன் சொன்ன இயல்பையுடைய சுத்தான்மாக்களுக்கு அளவிறந்த தெய்வீகம் பொருந்திய ஞானத்தால் சிவனுடைய பரிபூரணம் உள்ளளவும் அறிந்து உபாதியைக் கொடுக்கும் தன்மையாகிய அநுக்கிரகம் பண்ணும் என்க.

61. பண்ணிய அந்தப் பக்குவம் தன்னில்
நண்ணிய ஞானக் கண்ணுற் கண்ட
திவ்விய மான சிவானந் தத்தினை
அவ்வயின் ஈவர் அநாசிதர் தாமே.

(இ–ள்) ஞான ஆதித்தியனை சிவனது அநுக்கிரகமாகிய அருளால் விளங்கிய ஞானக்கண்ணுல் உண்மையைக் கண்ட அவதாரத்தில் விளக்கினிடமாகப் பதார்த்தத்தைக் கண்டவனுக்கு மேல் விளக்கு வேண்டாதது போல் இவனை அருளுக்கு மேற்படுத்திச் சிவாநுபூதியாகிய சிவானந்தத்தைச் சடுதியில் அநுக்கிரகிப்பர் பரனுகிய அநாசிருதர் என்க.

62. இவர்கள் வடிவா கியதிரு மேனியைத்
தவறகல் சுத்த வித்தியா தத்துவம்
மகேச தத்துவம் சதாசிவ தத்துவம்
தவாத விந்து நாததத் துவம் எனப்
பகர்தரு மறைகள் பகுத்துரைத் தனவே.

(இ–ள்) சுத்தவித்தை, மகேசுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் இவர்களுக்குத் திருமேனியும் புவனமும் முறையே குற்றமில்லாத சுத்தவித்தியாதத்துவம், மகேசுரதத்துவம், சதாசிவ தத்துவம், கெடாத விந்துதத்துவம், நாததத்துவம் என்று அரிய வேதங்கள் பிரித்துச் சொல்லும் என்க.

63. அதனுல்,
தத்துவம் மூர்த்தி இரண்டெனத் தகுமே.

(இ—ள்) ஆதலினுல் தத்துவம் என்றும், தத்துவத்தை அதிட்டித்திருக்கும் மூர்த்தி என்றும் இரண்டாம் என்க.

64. சுத்த மாயை தொடுத்துரைத் தனம் இனி
வைத்துணர் அசுத்த மாயை இலக்கணம்
ஒத்துரை செய்வன் உயர்மறை முறையே.

(இ—ள்) மேலான வேதம் சொன்ன அடைவே சுத்தமாயையின் இலக்கணம் சொல்லுவாம் என்க.

65, அதுதான்,
நித்திய மாக நிறைந்தள விலதாய்
ஒத்துறு சகத்துக் கொருவித் தாகி
என்றும் அழிவில தென்றன ரன்றே.

(இ—ள்) அந்த அசுத்தமாயை அசேதன காரணம் ஆதலால் நித்தியமாய், அசேதனத்தில் பூரணமாய், அநேக சத்திகள் உடைத்தாய், ஒன்ருய், தனு கரண புவன போகங்களாய், சகத்துக்கு ஒப்பில்லாத ஒரு விதையாய், சர்வ சங்கார காலத்திலும் ஆன்மாக்களுக்கு இடங்கொடுக்கும் தன்மை ஒழியாததாய் இருக்கும் என்று சந்தேகமறச் சொல்லுவர் என்க.

66. அந்த மாயையில் வந்தது கலேயே.

(இ—ள்) அனேந்தசுரரால் கலக்கம் செய்யப்பட்ட மாயையிலே ஆணவத்தைச் சிறிது நீக்கியபோது, அக்கிரியையை நடத்துவது கலே ஆதலால் மாயையிலே கலே தோன்றினது என்க.

67. கலேயில் உதித்தது காலம் ஆகும்.

(இ—ள்) மறைப்பை நீக்கும் தொழில் [illegible] கலேகள் காலத்[illegible] ஆகையாலும், கலேயிலே காலம் உண்டென்று கலை, காலம், நியதி

மூன்றின் தொழிலும் ஓரிடத்திலாகையால் இவைமூன்றும் பிரியாசு வுள்ளன. சொல்லுமிடத்து முற்பிற்பாடு இல்லை என்க.

68. நியதியும் கலைக்கு நிகழ்அவ தரப்பெயர்.

(இ—ள்) ஆணவம் நீங்கவே அநுக்கிரகம் என்று நியமிக்கை யாலும், நியமித்த இடத்துத் தொழில் கலை ஆகையாலும், அந்தக் கலைக்கு நியதி என்று அவதாரப்பெயர் ஆயிற்று என்க.

69. நியதியில் புருட தத்துவம் நேரும்.

(இ—ள்) பஞ்சகஞ்சுகத்தூடன் கூடிப் போகத்தை நியமித்த இடம் புருட தத்துவம் ஆகையால் நியதியில் புருடதத்துவம் சேர்ந்தது என்க.

70. பின்பு கலையிற் பிறந்தது வித்தை.

(இ—ள்) கிரியாசத்தி ஆணவத்தை நீக்க ஞானசத்தி போகத் தில் அறிவைப் பண்ணுகையால் பின்பு கலையிலே வித்தை தோன்றும் என்க.

71. அந்த வித்தை அறிந்த தராகம்.

(இ—ள்) போகத்தில் அறிவும் தொழிலும் உண்டான இடத்து, போகத்தில் இச்சை அறிவு இடமாக உண்டாகையால் வித்தையில் அராகம் உண்டானது என்க.

72. பின்தரும் வித்தை பிரகிரு தியையே.

(இ-ள்) கலை, காலம், நியதி, வித்தை, அராகம் என்னும் ஐந்தும் கூடிப் போகமே அறிவாகத் தனு கரணாதிகள் ஒன்றியே இருந்த இடம் பிரகிருதி ஆகையால் பின்பு வித்தையிலே பிரகிருதி உண்டாகும் என்க.

73. பிரகிரு தியிலே பிறக்குமுக் குணமே.

(இ-ள்) அறிவு தொழில் இச்சை ஒத்த இடம் பிரகிருதி

ஆகையால், இதன் விகாரமே சாத்துவிக இராசத தாமதம் என்னும் விகிர்தி ஆகையாலும், இதனிடமாகத் தனு காரணாதிகள் உண்டாகையாலும் பிரகிருதியிலே முக்குணம் பிறக்கும் என்க.

**74.** அப்பிர கிருதிக் கவதர நாமம்
துப்பமர் குணதத் துவமெனச் சொல்லுவர்.

(இ—ள்) பிரகிருதியின் விகிர்தியே குணமாகையால், அந்தப் பிரகிருதிக்கு அவதாரப்பெயர் குணதத்துவம் என்று சொல்லுவர் என்க.

**75.** ஆசறும் முக்குணம் ஆவன சாத்விக
இராசத தாமதம் என்றியம் பினரே.

(இ—ள்) குற்றமற்ற குணவிகாரமாவன சாத்துவிக, இராசத, தாமதம் என்று சொல்லுவர் என்க.

**76.** சாத்விகம் ஒளியைத் தருமென மொழிப
இராசதம் அபர விருத்தியை ஆக்கும்
தாமதம் அந்த காரம் தருமே.

(இ—ள்) சாத்துவிகம் பிரதானமான ஞான ஏதுவாயிருக்கும். இராசதம் தொழிலாகிய போக ஏதுவாய் இருக்கும். தாமதம் போக மோட்சத்துக்கு ஏதுவல்லாதது ஆகையால் அந்தகாரமாய் இருக்கும் என்க.

**77.** சாத்விக இராசத தாமதம் அயன்மால்
ஏத்தும் உருத்திர ருக்கிவை முறையே
வாய்த்த குணமென வகுத் துரைத் தனரே.

(இ—ள்) சிருட்டித் தொழில் விளக்கமான சாத்துவிகம் பிரமாவுக்கும், போகத்தொழில் நிலையான இராசதகுணம் விஷ்ணுவுக்கும், போகத்தொழிலற்ற இடம் நிராலம்பம் ஆகையால் அந்தகாரமான தாமதகுணம் குண உருத்திருக்கும் இயல்பான ஒவ்வொரு குணமெனப் பெரியோர் வகுத்துச் சொல்லுவர் என்க.

**78. இந்தக் குணம்தனில் வந்தது புத்தி.**

*(இ–ள்) குணமே புத்திக்குத் தாரகம் ஆகையால் குணத்திலே புத்திதோன்றியது என்க.*

**79. புத்தியில் அகங்கா ரம்புறப் படுமே.**

*(இ–ள்) அறிவு இடமாக ஆங்காரமுண்டாகையால் புத்தியிலே அகங்காரம் தோன்றியது என்க.*

**80. அதுபூ தாதிக மேவை காரிகம்**
**முதிர்தை சதமென மூவகை ஆகும்.**

*(இ–ள்) அகங்காரதத்துவம் பூதாதி என்றும், அமைப்பு வைகாரிகம் என்றும், முதிர்ந்த தைசதம் என்றும் மூவகை ஆம் என்க.*

**81. தந்தபூ தாதியிற் சத்ததத் துவமுதல்**
**கந்ததத் துவமென ஐந்துமுற் பவமே.**

*(இ–ள்) பூதாதி என்று உரைத்த ஆங்காரத்தில் சத்த பரிச ரூப ரச கந்தம் என்னும் ஐந்து தத்துவங்களும் தோன்றின என்க.*

**82. சத்தம் முதலிய தத்துவம் ஐந்தினும்**
**அத்தகு வெளிமுதல் அம்புவி அளவாம்**
**தத்துவம் ஐந்தும் தனித்தனி வருமே.**

*(இ–ள்) சத்த தத்துவத்திலே ஆகாசமும், பரிசத்திலே வாயுவும், ரூபத்திலே தேயுவும், ரசத்திலே அப்புவும், கந்தத்திலே பிருதிவியும் தோன்றும் என்க.*

**83. வைகாரி கந்தரும் வாக்கொடு கைகால்**
**உய்யாப் பாயுரு உபத்ததத் துவமே.**

*(இ–ள்) வைகரி என்னும் ஆங்காரத்திலே வாக்கு, பாதம் பாணி, பாயுரு, உபத்தம் ஆகிய ஐந்து தத்துவமும் தோன்றும் என்க.*

84. தைசத ஆங்கா ரந்தான் செவிமுதல்
ஐந்துணர் மூக்கள வைந்துதத் துவமும்
பெய்துணர் மனதத் துவமும் பெறுமே.

(இ-ள்) தைசதம் என்னும் ஆங்காரத்திலே சப்தங்களை அறியும் தொழிலையுடைய சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் ஐந்து தத்துவமும், பகுத்தறியும் மனதத்துவமும் தோன்றும் என்க.

85. ஆகிய தத்துவம் ஆரு றுயிர்களின்
போக பூமி எனப்புகன் றதுவே.

(இ-ள்) இப்படி உண்டாக்கப்பட்ட தத்துவம் முப்பத்தொன்றும், இவற்றை நடத்தும் காரணதத்துவம் ஐந்தும், ஆகமுப்பத்தாறும் ஆன்மாக்களுக்குச் சுத்தாசுத்தமாயுள்ள போகம் புசித்தற்கு இடமாதலாலே போகபூமி எனச் சொல்லியது என்க.

86. தாங்கிய புத்தி தத்துவம் அதனில்
பாங்கினில் உதித்த பாவகம்ஐம் பதுமே.

(இ-ள்) போகத்துக்குத் தாரகமான புத்தித் தத்துவத்திலே அந்த போகத்துக்கு ஏற்பப் பாவத்தை உண்டாக்கும் குணம் ஐம்பதும் உண்டாயின என்க.

87. கரணம் பதின்மூன் றொருபது காரியம்
பரவுறும் இந்திய பந்தம் பதினொன்
றியலாங் காரம் புத்தியெட் டெட்டே.

(இ-ள்) கரணம் பதின்மூன்று, காரியம் பத்து, மேல் கூறியும் குணத்தையுடைய இந்திரிய பந்தம் பதினொன்று, சொல்லப்பட்ட ஆங்காரம் எட்டு, புத்தி எட்டு ஆக ஐம்பதும் பந்தாக்ஷ பாவம் என்க.

88. பன்னிய கரணம் பதின்மூன் றுவன
மன்னிய செவிமுதல் வாக்கு முதலெனப்

புனையுமீ ரைந்து புறக்கர ணங்களும்
மனமொடு புத்தி வருமாங் காரம்
எனுமூன் றந்தக் கரணமும் இவையே.

(இ-ள்) *பொருந்திய காணம் பதின்மூன்றையும் சொல்லில்:- மன்னிய சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்னும் புறக்காணம் பத்தும்; மனம், புத்தி, புத்தியில் தோன்றும் ஆங்காரம் என்றும் அந்தக்காணம் மூன்றும் ஆகக் காணம் பதின்மூன்று என்க.*

89. காரியம் பத்தே காசினி முதலைந்
தேறிய கந்தம் முதலொலி ஈறும்
சீரிய தன்மாத் திரை இவை ஐந்தே.

(இ-ள்) *பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்றும் பூதம் ஐந்தும்; அழகிய கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம் என்றும் தன்மாத்திரை ஐந்தும் ஆகப் பத்தும் காரியமாம் என்க.*

90. இந்திய பந்தமும் ஈரைந் தொன்றவை
முந்திய செவிமுதல் மொழிமுதல் மனமே.

(இ-ள்) *முன்சொல்லிய சோத்திராதி ஐந்து, வாக்காதி ஐந்து மனம் ஒன்று ஆகப்பதினொன்றும் இந்திரியபந்தம் என்க.*

91. கைதரும் எட்டாங் காரம் இயம்பில்
தைசத வைகா ரிகபூ தாதியென்
றெய்தாங் காரம் இவையொரு மூன்றொடு
தமமே மோகம் தனிமிக மோகம்
அமைவுறு தரமிச் சிரமே அதனோ
டந்த தரமிச் சிரமெனும் இந்த
ஐந்தாங் கார பேதமும் இவையே.

(இ-ள்) *போக உபகாரமான ஆங்காரம் எட்டையும் சொல்லில்;-தைசதம், வைகாரிகம் பூதாதி என்றும் ஆங்காரம் மூன்றும், போகம் புசிக்கைக்கு மாறுபாடாய தமம் என்றும் அந்தகாரம், மயக்க*

மாகிய மோகம், அதில் மகத்தான மயக்கமாகிய மோகம், இருள் பொருந்திய அந்தகாரம் என்னும் தாமிச்சிரம், அதில் தெரியாமை என்னும் அந்ததாமிச்சிரம் என ஐந்தும் ஆங்கார மேலீடான மறைப்பாகையால் ஆங்காரபேதம் என்க.

92. புத்தி எட்டே புகழ்தரு மாதரு
மத்திறம் இருநான் கென்றறைந் தனரே.

(இ-ள்) புத்திகுணமும் எட்டையும் சொல்லில்;—தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் என்னும் கூட்டமும்; இதற்கு மாறாகவுள்ள அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் என்னும் கூட்டமுமாக எட்டும் புத்திகுணம் என்க.

மேல் இவற்றின் பேதத்தையும் வியாத்தி வியாபகத்தையும் சொல்லுகிறர் :—

93. ஞானம் சாத்விக நலமிகு தருமமும்
ஆனவை ராக்கியம் அதனே டாக்கமும்
ஏனை இராசதம் அதன்மா திகளொரு
நான்கையும் தாமத மாக நவிற்றுவர்.

(இ-ள்) இக்குணம் எட்டில் ஞானம் சாத்துவிகத்தைப் பொருந்திவரும். நன்மைமிகுந்த தருமமும், அதன் பின்னான வைராக்கியமும், அதனோடு ஐசுவரியமும் பொல்லாத இராசதத்தைப் பொருந்திவரும். அதன்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் ஆகிய நாலும் தாமதத்தைப் பொருந்திவரும் என்க.

94. தன்மா திகளுரை தருபத் திருநான்
கிம்மா றென்பதோ டெட்டதன் மாதிகள்
ஈரைந் திருநான் கொன்பான் எட்டெனக்
கூறும் புத்தி குணமெழு பதுமே.

(இ-ள்) தன்மாதிகளுடைய பேதம் எழுபதையும் சொல்லில்;- தன்மம் பத்தாவன—அஹிம்சை, சத்தியம், பிரமசரியம், கிருபை,

குருசேவை, சுத்தம், பிரியம், கொல்லாமை, கள்ளாமை, பொய்யாமை என்பன. ஞானம் எட்டாவன—தாரம், சுதாரம், தாரணம், சுதாரையந்தம், பிரமோகம், பிரமுத்தி, ரம்மியம், சதாபிரமுத்திதம் என்பன. வைராக்கியம் ஒன்பதாவன :—அம்மை சலிலே, மோகம், திருடாமை, சுதாரை, சுபாரை, சுநேத்திரை, சுமாரை, உத்தமாம் பத்திகை என்பன. ஐசுவரியம் எட்டாவன :— அணிமா, மகிமா, லகிமா, கிரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் முதலியன.

அதன்மம் பந்தாவன :— இம்சை, அசத்தியம், அப்பிரமசரியம், கிருபையீனம், குருஇகழ்ச்சி, அசுத்தம், பிரியமின்மை கொலே, களவு, பொய் முதலியன. அஞ்ஞானம் எட்டாவன :— அதாரம், அசுதாரம், அதாரணம், அதாரையந்தம், அப்பிரயோகம், அப்பிரமுத்திதம், அரம்மியம், அசதாபிரமுத்திதம் என்பன, அவைராக்கியம் ஒன்பதாவன :—அனம்பை, அசலிலே, அமோகம், அதிருடாமை, அசுதாரை, அசுபாரை, அசுநேத்திரை, அசுமாரை, அதுதாம்பத்திகை என்பன. அனைசுவரியம் எட்டாவன :— அஅணிமா, அமகிமா, அலகிமா, அகிரிமா, அப்பிராத்தி, அப்பிராகாமியம், அஈசத்துவம், அவசித்துவம் முதலியன. இவ்வாறு விகற்பமான அழகிய புத்தியின் குணம் எழுபதாம் என்க. இவை வேறுவிதமாகவும் கூறப்பட்டுள்ளன.

95 ஆக்க மில்குணம் பைசா சத்துக்
கவ்வயி ராக்கியம் இராக்கதம் இயக்கம்
அஞ்ஞானம் அதன்மம் காந்தவம் தன்மம்
ஐந்திரம் ஞானம் சௌமியம் வைராகம்
இயம்பிர சாபத் தியம்பிர மந்தனக்
காக்கமொன் றுகச் சுபாவமா யிருக்கினும்
மொழிபசா சமுதலி யோனிகள் எட்டினும்
இவைவி யாபித் திருப்பது துணிவே.

(இ-ள்) பிசாசகளுக்கு அனைசுவரிய குணம், இராக்கதர்களுக்கு அவைராக்கிய குணம், இயக்கருக்கு அஞ்ஞானகுணம், கந்த

ருவருக்கு அதன்மகுணம், ஐந்திரர் என்றும் சாதிக்குத் தன்மகுணம் சௌமியர்க்கு ஞானகுணம், பிரசாபத்தியர்க்கு வைராக்கிய குணம், பிராமணருக்கு ஐசுவரியகுணம் ஆக இந்த எண்கணமான தெய்வ யோனி பேதத்துக்கு ஒவ்வொரு குணம் சுபாவமாக இருந்தாலும் பிசாசம் முதலான எட்டு யோனிகளிலும் ஒன்றிலொன்று கலந்து சந்தேகமற வியாபித்திருக்கும் என்க.

96. ஏய்ந்த பசாசம் இராக்கதம் இயக்கம்
இயங்கும் காந்தவம் ஐந்திரம கவலேயில்
சௌமியம் பிரசா பத்தியம் பிரமமென்
றிவற்றுக் குறுகுணம் நிரல்நிறை யோரெட்
டீரெட் டிருபான் நான்கெண் ணுன்கெண்
ணைந்தெண் ணுறெண் ணேழெட் டெட்டாய்
நண்ணும் புத்தி நவில்குண பேதம்
எண்ணு லிருநூற் றெண்பதோ டெட்டே.

(இ-ள்) பொருந்திய பிசாசுகளுக்கு ஐசுவரிய குணம் எட்டு, இராக்கதருக்குப் பதினாறு, இயக்கருக்கு இருபத்துநான்கு, கந்தருவருக்கு முப்பத்திரண்டு, ஐந்திரருக்கு நாற்பது, சௌமியருக்கு நாற்பத்தெட்டு, பிரசாபத்தியருக்கு ஐம்பத்தாறு, பிராமணருக்கு அறுபத்துநாலு ஆக இருநூற்றெண்பத்தெட்டு. பிசாசு முதல் எல்லாருக்கும் வைராக்கிய குணம் முறையே—7, 14, 21, 28, 35, 42, 49, 56 ஆக 252: ஞானகுணம் முறையே—6, 12, 18, 24, 30, 36, 42, 48, ஆக 216: தன்மகுணம் முறையே—5, 10, 15, 20, 25, 30, 35 40 ஆக 180: அதன்மகுணம் முறையே—4, 8, 12, 16, 20, 24, 28, 32 ஆக 154: அஞ்ஞானகுணம் முறையே—3, 6, 9, 12, 15, 18, 21, 24 ஆக 108: அவைராக்கியகுணம் முறையே—2, 4, 6, 8, 10, 12, 14, 16 ஆக 72: அனைசுவரிய குணம் முறையே—1, 2, 3, 4, 5, 6, 7, 8 ஆக 36: ஆக மொத்த குணபேதம் 1008-ம் மேலே சொன்ன 288-ல் அடங்கியிருத்தலால் 288-ஐயே பிரதானமாகக் கொள்வர் பெரியோர் என்க.

97. சொன்ன குணபேதம் தோன்றில் தொகையா
முன்னூற் றைம்பத் தெட்டென மொழிப.

(இ–ள்) தன்மாதி குணம்—70, ஐசுவரிய பேதமாகச் சொல்லிய 1008-ஐயும் அடக்கிக்கொண்டிருக்கிற பேதம்—288 ஆகக் குணத்தொகை 358 ,என்க.

98. ஆன முன்னூற் றைம்பத் தெண்குணம்
மானிடர் வியாபித் திருப்பது வழக்கே.

(இ–ள்) இவ்வாறு முன்னூற்றைம்பத்தெட்டுக் குணமும் மனிதரிடத்திலே குறைவற வியாபித்திருக்கும் என்க.

99. வியன்மிகு முக்குண வியாத்தி விரிப்பின்
அயன்முதல் இந்திரன் அளவாம் அமரர்
ஐயமில் சாத்விக குணமதிட் டிக்கும்.

(இ–ள்) வியப்புமிகுந்த முக்குணத்தின் வியாத்தியை விரியச் சொல்லில் பிரமன் முதல் இந்திரன் ஈறாகவுள்ள தேவர்களை நிலைபெற்ற சாத்துவிககுணம் அதிட்டிக்கும் என்க.

100. யாழோர் இயக்கர் அசுரர் இராக்கதர்
யாது தானவர் பிசாசுகள் இவர்களைக்
கோதமர் தாமத குணமதிட் டிக்கும்.

(இ–ள்) கந்தருவர், இயக்கர், அசுரர், இராக்கதர் பேதமான யாதுதானவர், பேய்கள் இவர்களைக் குற்றம் பொருந்தின தாமத குணம் அதிட்டிக்கும் என்க.

101. இருநிலத் தியங்கும் இருடி கணங்களைத்
திருமிகும் இராசதம் சேட்டித் திடுமே.

(இ–ள்) பூலோகத்தில் நித்தியத்தைப் பெற்றுள்ள இருடி கணங்களை அழகு பொருந்திய இராசத குணம் அதிட்டிக்கும் என்க.

102. தாவர பேதம் சரித்திடு பதங்கள்
காலள வில்லன காலில் லாதன
சால அதிட்டிப் பதுதா மதகுணம்.

(இ-ள்) பேதப்பட்ட தாவரங்கள், பறவைகள், அநேக கால்களோடு ஊர்வன, கால்களின்றி ஊர்வன ஆகிய இவற்றை மிகுந்த தாமதகுணம் அதிட்டிக்கும் என்க.

103. அன்ன மனிதரை அதிட்டிக் கும்குணம்
இன்ன தெனப்பிறி தியம்பவொண் ணுமையின்
இன்ன குணங்கட் கிருப்பிடம் ஆகிய
தன்மா தன்மம் தானே தணவா
தெந்நா ளினும்அதிட் டிக்குமென் றதுவே.

(இ-ள்) முக்குணங்களின் விரிவு யாவும் சுதந்திரமாயுடைய மனிதர்களை அதிட்டிக்கும் குணம் இன்னதெனப் பிரித்துச் சொல்லக்கூடாமையால் புத்திகுணத்துள் நற்குணங்கள் காலில் பிரதானமான தன்மம் என்னும் புண்ணிய குணமும், தீயகுணங்கள் காலில் பிரதானமான அதன்மம் என்னும் பாவகுணமும் இவ்விரண்டின் அடியாக எல்லாக் குணமும் உண்டாகையால் சத்துவ சுபாதம் அவவும் ஒழியாமல் நின்று அதிட்டிக்கும் என்க.

104. தன்மம் தனையது தவிரமூன் றதன்மம்
தனையது தவிர மூன்று சரிக்கும்.

(இ-ள்) ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் என்னும் மூன்று குணமும் தன்மத்தையும், அஞ்ஞானம் அவைராக்கியம் அனைசுவரியம் என்னும் மூன்று குணமும் அதன்மத்தையும் ஆசரிக்கும். ஆகையால், உலகத்தினிடத்துத் தன்மம் அதன்மம் ஆகிய புண்ணிய பாவமே அதிட்டிக்கும் என்க.

105, அதன்ம இலக்கண மாவன வேது
வாத செற்பம் மதமிகு விதண்டை
விவாதம் விஞ்சைய சஞ்சயம் தானே

துதைந்திடும் அசுத்த சூனிய வாதம்
ஞானம் தெய்வம் தருமநல் லருத்தம்
ஈனமில் வீடிவ் வைந்துநிந் தனையே

(இ–ள்) அதன்மமாகிய பாவம் எழும்வழி எப்படி ? என்னில், ஏதாவது பொருளல்லாதவற்றைப் பொருள் என்று திட்டாந்த மெய்நூலாகச் சாதித்தல்; வாதமாவது உண்மையுணர்தல் வேட்கையோன் கதை; செற்பமாவது சாதனம் இரண்டு உள்ளதன்கண் வெல்லும் வேட்கையுடையான் கதை; விதண்டையாவது தன் கோட்பாட்டை நிலைபெறுத்தாத கதை; ஆகிய இம்மூன்று வகையாலும் மலைவு செய்து அறுதியிடாமல் இருத்தல் விவாதம். விந்தைசைய சஞ்சயமாவது உபதேசத்தால் அறிவதன்றி வியவகாரத்தால் அறியப்படாத மிகுந்த சந்தேகம். துதைந்திடும் அசுத்த சூனியவாதமாவது அசேதன அறிவிநூல் கருத்தா இல்லை என்னும் சமயத்தைச் சாதித்தல். ஞானம் தெய்வம் தருமம் நல்அருத்தம் ஈனம் இல் வீடு இவ்வைந்து நிந்தனையாவது லௌகிகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்னும் ஐவகை ஞானத்தையும் நிந்தித்தல், சிவமூர்த்தி பேதங்களான தெய்வங்களை நிந்தித்தல், கொல்லாமை முதலிய தன்மத்தினை நிந்தித்தல், கேட்ட அர்த்தங்களை இகழ்தல், அழிவில்லாத மோக்ஷத்தை அல்ல என்றல் இவை முதலிய மாறுபாடுகள் என்க.

106. இந்த அதன்மம் இசைந்தவர் நரகடைந்
தந்தமில் துன்பம் அநுபவிப் பாரே.

(இ–ள்) இத்தகைய ஐவகையான அதன்மபாவங்களைச் செய்தவர்கள் அஞ்ஞானத்துடன் பொருந்தி நரகமடைந்து அளவில்லாத யாதனா சரீரத்தோடு கூடி மிகுந்த துக்கப்பற்றோ அவைராக்கியமாகவும், சுகமின்மையே அநைசுவரியமாகவும் அநுபவிப்பார்கள் என்க.

107. தன்மம் என்னும் குணத்திலுண் டானது
நல்ல லௌகிக ஞானந் தானே.

(இ-ள்) தன்மம் ஆகிய பசுபுண்ணியத்தினாலே நல்ல லௌகிக ஞானம் உண்டாம் என்க.

108. கேடில் வைராக் கியகுணம் தந்தது
நாடிய பௌத்த ஞானந் தானே.

(இ-ள்) ஆசையுடன் கூடியிருப்பினும் ஆசை அறுதலான கடிப்புக் கெடாத வைராக்கிய குணத்தால் புத்தர் சமணர் என்பவர் நாட்டப்பட்ட ஞானம் உண்டாம் என்க.

109. ஞானவை ராக்கியம் தன்னில் நன்குண்
டானது சாங்கிய ஞானமென் றறைவர்.

(இ-ள்) சிறிது பசுஞானமும், சிறிது பிரபஞ்ச வைராக்கியமும் கூடின இடத்தில் நிரீச்சுர சாங்கியஞானம் உண்டாம் என்று சொல்லுவர் என்க.

110. அருண்ஞா னமும்வை ராக்யமும் மார்க்கமுந்
தருமால் யோக ஞானம் தனேயே.

(இ-ள்) நல்லறிவாகிய ஞானமும், வைராக்கியமும், அணிமா ஆதி அஷ்டஐசுவரியமும் இம்மூன்றும் கூடின இடத்துக் கன்ம யோக ஞானம் உண்டாம் என்க. ஆல்-அசை.

111. குவிதரு புத்தி குணங்களுக் கதீதம்
நவிலதி மார்க்க ஞானந் தானே.

(இ-ள்) எண்ணிறந்த புத்திகுணங்களுக்கும் அதீதமான வழி அதிமார்க்க ஞானம் என்க.

112. உலக ஞானத் ததீதமென் றோங்கிய
நல்லதி மார்க்க ஞானம் உளரெனப்
பன்னிய பாசு பதர்கா பாலரென்
றின்னோர் சனனம் இலரென மொழிப.

(இ—ள்) பசுஞானம் என்னும் லௌகிக ஞானத்துக்கு அப்பாலாய்ப் பெரிதாய சிவஞானம் அல்லாத அதிஞானமார்க்கமாகிய நல்லஞானம் உடையவர்களாய்ச்சொல்லப்பட்ட பாசுபதர், காபாலர் இவர்கள் அபேதமுத்தியில் சிவாநுக்கிரகத்தால் மோட்சமடைந்து சனனம் அடையார்கள் எனச் சொல்லப்படுவர் என்க.

113. லௌகிக ஞானம் உளவே தாந்தம்
மாயா வாதம் தத்துவ வாதம்
பாட்டம் பிரபா கரபஞ்ச ராத்திரம்
சாங்கியர் ஏனை நியோகர் சுபாவ
வாதிகள் கன்ம வாதிகள் சொல்ல
வழாத சஞ்சய வாதிகள் அமணர்
பூத வாதிகள் உலக வாதிகள்
பாதக முணர்சட பதார்த்த வாதிகள்
நியாய வாதிகள் அநேக வாதிகள்
என்னும் பெயரினர் என்றும் பிறப்பறு
திருவினை ஆழி யிடைச்சுழன் றியங்கும்
புண்ணிய பாவம் தம்மிலொத் திடுநாள்
நேர்தரு சத்தி நிபாதம் பிறந்துழிச்
சார்குண பாசம் தனைவிட்டு நீங்குவர்
நீங்கிய பொழுதினில் நிகழ்வினைக் கடல்நின்
றுங்குகரை ஏறுவர் அதுநீங் கியபின்
வீட்டை எய்துவர் அவர்வீடு கூடும்
ஆசை கூடி உயிர்க்கு மெச்சிய
மறைகள் விளம்பிய வீட்டை நிச்சயம்
செய்வது நியதி தத்துவ மாமே.

(இ—ள்) சுவர்க்காதியின் பொருட்டாகவுள்ள லௌகிகஞானம் பல பேதப்பட்டிருக்கும். அவை:— வேதாந்தம், மாயாவாதம், தத்துவவாதம், பாட்டம், பிரபாகரம், பாஞ்சராத்திரம், சாங்கியவாதம், நியோகவாதம், சுபாவவாதம், கன்மவாதம், சந்தேகமே சொல்லும் சஞ்சயவாதம், சயினவாதம் பூதவாதம், உலகவாதம்,

பாதகமே அறிவாயுள்ள சடபதார்த்தவாதம், நியாயவாதம், அநேக வாதம் என்பன. இச்சமயங்களை அநுட்டித்துள்ளவர்கள் சனன மரணப் பற்றுமல் புண்ணியபாவம் என்னும் சக்கரத்தில் பூட்டையும் நீரும் போலவும், கறங்கோலை போலவும் சுற்றித்திரிந்து, புண்ணிய பாவம் தம்மில் ஒத்தகாலத்துத் துலையொப்பான சத்திநிபாதம் பிறந்தபின்பு தங்களைச் சார்ந்துள்ள குணபேதமாகிய பாசங்களை விட்டு நீங்குவர்; நீங்கவே, இருவினை என்னும் சமுத்திரத்தினின்றும் கரையேறுவர்; ஏறவே, மோட்சவீடு அடைவர். இவர்களுள் மோட்ச விட்சுகளுக்கு வேதங்கள் விரும்பிக் கொண்டாடப்பட்ட மோட்சத்தை நியமிக்கும் நியதிதத்துவம் மனைதுணையாக வியாபித்து நின்று அப்பால் விட்டு நீங்கும் என்க.

114. அந்த நிச்சயம் செயுமவ தாரத்தில்
பந்த மும்மல பாவம் தன்னை
விழுமிய கால வேகம் தன்னால்
கழல விழைப்பது காலதத் துவமே.

(இ-ள்) மோட்சத்தை நியமிக்கும் அவதாரத்தில் பிரசன்னமாவதுவான மும்மலபந்தத்தைக் குற்றமற்ற தனது கடுமையால் நீக்குவது காலதத்துவம் என்க.

115. காலம் இறந்தது வீடெனக் கருதுவர்.

(இ-ள்) மோட்சத்தில் காலம் இல்லை என அறிக என்க.

116. அப்படிக் காரிய அசுத்ததத் துவங்களும்
துப்பமர் காரண சுத்ததத் துவங்களும்
தப்ப மாக்கும் சாதாக் கியத்தினை
இப்படி ஆசரித் திருக்குமென் றனரே.

(இ-ள்) இதுகாறும் கூறிய பிரகாரம் காரியமாகிய அசுத்த தத்துவங்களும், நன்மையான காரணமாகிய சுத்த தத்துவங்களும் கிருபை பொருந்திய சாதாக்கியதத்துவத்தினை இந்தப் பிரகாரம் ஆசரித்திருக்கும் என்க.

117. தன்னிகர் கன்ம சாதாக் கியவடி
வைம்மூர்த் திகளா தலினேம் பூதமும்
அம்முறை ஆசரிப் பதுவிதி யாமே.

(இ–ள்) தனக்கு நிகரில்லாத கன்மசாதாக்கியருடைய திருமேனி பஞ்சமூர்த்தியின் திரட்சியாதலால் அந்த முறையிலே சத்தியோசாத மந்திரங்களைப் பஞ்சபூதங்கள் ஆசரிக்கையாலும், அந்தக் கன்மசாதாக்கியரைப் பஞ்சபூதங்களும் சந்தேகமற ஆசிரயித்திருக்கும் என்க.

118. மூர்த்திகள் பேதம் முயங்கலின் அம்மூர்த்
திகளிட மாக நின்ற ஐந்தொழில்
செம்மை விளங்க மகிழ்ந்து செயும்சிவ
ரூபம் ஆகிய சுத்த குணந்தான்
முருகலர் ஐந்து முகமா வதுவே.

(இ–ள்) சதாசிவமூர்த்திகள் ஐந்தும் ஐந்து பேதமாகிய திருமேனியாய் இருத்தலால் அந்தமூர்த்திகளிடமாக எழுந்தருளியிருந்து பிரியத்துடன் அழகு விளங்கப் பஞ்சகிருத்தியத்தைச் செய்யும் தான் பரமசிவருடைய சுத்தகுணம் ஐந்தும் இந்தக் கன்மசாதாக்கியருக்கு மணம் பொருந்திய ஐந்து திருமுகமாக நின்றது என்க.

119. இத்தொழிற் சாதாக் கியர்திரு மேனியில்
சுத்த மகேசுரம் தோற்ற மாகும்.

(இ–ள்) இந்தக் கன்மசாதாக்கியர் அவதாரபேதம் மகேசுரர் பேதம் என்று சொன்னபடியாலும், மூலமே அவருக்குத்திருமேனி ஆதலாலும், முன் சொல்லிய சுத்தமான மகேசுரருக்கு இவர் திருமேனியிலே தோற்றம் என்க.

120. மொழியும் இவர்திரு முகத்தில் தோன்றிய
வழியில் சிவ'சித் தாந்தமும் அதுவே
தழுவிய ஆகம சாத்திரங் களுமே.

(இ-ள்) முன்சொன்ன சதாசிவ நாயனார் திருமுகத்திலே பர சமயங்களை நிராகரணம் பண்ணுவதாய் நிலைபெற்றுள்ள சித்தாந்தம் பொருந்தின ஆகமங்கள் ஈசானத்தில் எட்டும், சத்தியோசாதத்தில் ஐந்தும், வாமத்தில் ஐந்தும், அகோரத்தில் ஐந்தும், தற்புருடத்தில் ஐந்தும் ஆக இருபத்தெட்டும் இவற்றைப் பின்சென்ற சாத்திரங்களும் தோன்றும் என்க.

121. இவரே காரணம் எவைக்கும் என்ப
தித்தொழிற் சாதாக் கியலிங் கத்தே
நித்த சகள நிட்கள சிவனைப்
பத்தர் தியானம் பண்ணுவ ரன்றே.

(இ-ள்) பிரமா விஷ்ணு உருத்திரரை அதிட்டிக்கப்பட்ட பீடமும், அதற்குக் காரணமான மகேசுரரை அதிட்டிக்கப்பட்ட கல்லபத்திரமும், இப்படிப்பட்ட சிவாதனத்தின்மேல் எழுந்தருளியிருக்கப்பட்ட சிவமூர்த்தியான சதாசிவமும் அதன்முடி, முகம், மார்பு, கடிதடம், பாதம் என்னும் அவயவங்களை அதிட்டிக்கும் சத்தி காரியங்களாகிய வித்தியாதேகமும், அதற்கு மூர்த்திமானாகிய சிவோபாதி ஐந்தும், தண்டபங்கி வத்திரபங்கியுமாய் நின்ற அவதாரத்தில் அபரநாதம், அபரவிந்துவையும், பரநாதம், பரவிந்துவையும் ஒத்து அதிட்டிக்கப்பட்ட சாதாக்கியம் என்னும் சிவலிங்கப் பெருமானிடத்திலே இப்படி நித்தமாய், சகள நிட்களமான பரமசிவனை அடியார்கள் பத்தியுடன் தியானிப்பார் என்க.

122. தனுவொடு கூடுதல் சகளம் தனுவுடன்
அணைதலில் லாதது நிட்களம் ஆமே.

(இ-ள்) ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்னும் பெயரினர் அணுசதாசிவரில் ஈசானர், தற்புருடர், அகோரர், வாமதேவர், சத்தியோசாதர் என்னும் இவர்களை வைந்தவமே தனுவாக அதிட்டிக்கையால் தனு என்னும் பெயர் பெற்று உபாதியினாலும், உபாதிசூனியத்தினும் சத்தி சிவனை விட்டுப் பிரியாதாகையால்

சத்தி உபாதியுடன் கூடினது சகளம். சர்வ சங்கார காலத்தில் வைந்தவ காரியங்கள் மகாமாயையிலே ஒடுங்குகையால் சத்தியும் தொழிலற்றுத் தொழில் செய்யும் காரணத்துடனே கூடிநின்றநிலை நிட்களம் என்க.

123. இருள்தீர் முப்பத் தெண்கலை மயமாம்
உறுவடி வறுசிவ னுக்குண் டாகையால்
சிறக்கும் ஐம்முகத் தவன்திரு நாமம்
நிறக்கும் சகள நிட்களம் எனவே.

(இ–ள்) அந்தகாரத்தைக் கெடுக்கும் சத்தியின் காரியங்களான ஈசானியானது ஐந்து திருமுடிகளாகவும்; பூரணியானது நாலு திருமுகங்களாகவும்; ஆர்த்தியானது இருதயம், கண்டம், தோள்கள், நாபி, உதரம், முதுகு, மார்பு என்னும் எட்டுறுப்புக்களாகவும்; வாமையானது பாயு, கோசம், தொடைகள், முழந்தாள்கள், கணைக்கால்கள், புறவடிகள், கடிதடம், விரல்கள் என்னும் பதின்மூன்று உறுப்புக்களாகவும்; மூர்த்தியானது உள்ளங்கால்கள், உள்ளங்கைகள், நாசி, திருவாகுகள் என்னும் எட்டுறுப்புக்களாகவும் இவ்வாறு முப்பத்தெண் கலாசத்தி சொரூபமான உறுப்புக்களையுடைய பராசத்தி நிட்கள சிவனுக்குச் சுதந்தரமாகையால் இந்த உறுப்புக்களுடன் கூட்டிச் சிறந்த கன்மசாதாக்கியர் திருநாமம் சகளநிட்களம் என்று நிறமுண்டாகச் சொல்லப்படும் என்க.

124. அந்தர தனுவென ஆடியுள் நிழல்என
இந்தநிட் களத்தில் சகளமெய் தியதே.

(இ–ள்) நின்மலமாய் அரூபமான ஆகாயத்திலே நின்மலமாய் ரூபிகரித்த இந்திரதனுப் போலவும், பிரகாசமே வடிவாகிய கண்ணாடியிலே கட்புலன்களாற் காணப்பட்டுக் கடினமில்லாத பிரதிபிம்பம் போலவும் நிட்களத்தில் சகளம் பொருந்தினது என்க.

125. தயாபர கரும சாதாக் கியரைத்
தியான உணர்வு சேர்வு செப்பில்

படிக நிறம்உயர் படர்சடை மகுடம்
ஐந்து முடிமுகம் ஐந்தீ ரைங்கரம்
ஏக தேகம் இரண்டு பதாம்புயம்
சூலம் பரசு சுடர்வாள் வயிரம்
மேலும் அபயம் வலதுகை ஏந்திப்
பணிபா சாங்குசம் மணியொடு வரதம்
இனைய இடது கரங்களில் ஏந்தி
எண்ணும் இலக்கணம் யாவும் நிறைந்து
பண்ணுறு சகலா பரணமும் அணிந்து
திப்பிய அறுவையும் திப்பிய கந்தமும்
திப்பிய மாலையும் இவ்வகை புனைந்து
நீண்ட கரங்களும் நிகழ்ஒளி நகங்களும்
மூண்டெழு சற்றே முகிழ்த்தபுன் முறுவலும்
சாந்த ரூபம் ஏய்ந்தினி தெவர்க்கும்
ஆடுறு கருணை அறம்பொரு ளின்ப
வீடருள் புரிந்து வீற்றிருந் தனரே.

(இ-ள்) கிருபையே வடிவமான கன்மசாதாக்கியரைத் தியானத்தால் அறிந்து அடையும் முறைமையைச் சொல்[illegible] படிகம் போன்ற நிறமும், உயர்ந்து படர்ந்த சடாமகுடமும், ஐந்து திருமுடிகளும், ஐந்து திருமுகங்களும், பத்துக்கரங்களும், ஏகதேகமும், இரண்டு பாதங்களும், வலது கரத்தில் இச்சா ஞானக் கிரியை என்னும் அதிகாரமான மூவிலைச்சூலமும், பராசக்தி ரூபமாய் மூலயத்தானமான மழுவும், பரமசிவனது கர்த்திரு [illegible]மாய்ச் சுத்தத்துவங்களை உண்டாக்கும் கட்டுவாங்கமும், விளக்குகின்ற [illegible], சுத்தமாயையைப் பிரேரிக்கும் அபேதகுணமான [illegible] சிரமும், போகத்தானமாகிய சாதாக்கியத்தை அடைந்தவர்களுக்குச் செனன பயத்தைப் போக்குவதான அபயகரம்; இடது கரத்திலே [illegible]ரித்திகுணமாகிய நாகமும், இந்திரியங்கள் பத்தும்-தூலபூதம் ஐந்தும்-சூக்கும பூதம் ஐந்தும்-தன்மாத்திரை ஐந்தும் ஆக இருபத்தைந்தும் காட்டி நடத்தும் மாயாரூபமாகிய பாசமும், சங்கற்பவிகற்பமாகிய மனதத்துவத்தை நடத்தும் குணமாகிய நீலோற்பலமும், [illegible]

குணமாகிய அங்குசமும், சுத்த அசுத்தாத்தவாவைப்பிரவர்த்திக்கும் குணமாகிய பாசமும், நாதகுணமாகிய மணியும், ஆன்மாக்கட்குக் கன்மத்துக்கு ஈடாகப் போகத்தைக்கொடுக்கும் குணமான வரதமும், சங்கார குணமாகிய அக்கினியும் பொருந்தத்தரித்துச் சாமுத்திரிகா லட்சணம் முப்பத்திரண்டினாலும் நிரம்பிய பரமசிவனை ஆதார சேவையால் விளங்கும் குணமாய்ச் சதாசிவமாகி சர்வாபரணத்தை யும் தரித்தும், கிரீடாதாயி என்னும் பரிவட்டமும், அருளாகிய சுகந் தமும், பலவாயாகிய மாலையும், இடைவிடாமல் பொருந்தின நெடிய அத்தங்களும், பிரகாசத்தால் விளங்கிய நகமும், அனுக்கிரகாங்குர மான புன்முறுவலும், இவற்றை எல்லாம் உடையவராய் இருப்ப னும் இவற்றிற்கு அப்பாற்பட்டவராயும் இருந்து சர்வான்மாக்களுக் கும் தர்மார்த்த காம மோட்சங்களைக் கிருபையினாலே இனிதாக விளங்க அநுக்கிரகித்துச் சுகாசனமாக எழுந்தருளியிருந்தனர் என்க.

126. இந்தத் தியான எழிற்றிரு மேனியில்
ஐந்து சாதாக் கியமடை யும்படி
அவர்க்கமை கீழ்தென் வடமேற் றிசைமிசை
நோக்கிய முகங்கள் நுவலரும் தொழிற்சா
தாக்கிய மைந்தென் றுரைக்கத் தகுமே
அம்முகம் ஐந்தும் சகளம தாம்பொழு
தின்னணம் ஈசா னாதி எனப்படும்.

(இ-ள்) இவ்வாறு தியானத்தால் அறியப்பட்ட அழகிய கன்ம சாதாக்கியர் திருமேனியிலே பஞ்சசாதாக்கியம் அடைந்த முறை மையைச் சொல்லுமிடத்துக் கிழக்கே நோக்கிய பூர்வமுகம் சொல்லு தற்கு அரிய கன்மசாதாக்கியம் என்றும், தெற்கு நோக்கி தட்சிண முகம் கர்த்திரு சாதாக்கியம் என்றும், வடக்கு நோக்கிய உத்தர முகம் மூர்த்திசாதாக்கியம் என்றும், மேற்கு நோக்கிய பச்சிமமுகம் அமூர்த்தி சாதாக்கியம் என்றும், நாலு திக்கிலும் வியாபித்த ஊர்த் துவமுகம் சிவசாதாக்கியம் என்றும் சொல்லப்படும். இவை சதா சிவாதி பஞ்சமூர்த்திகளுடனும் கூடிச் சகளமாக நிற்றலால் சகள

நிட்களமான அந்தப் பிரபாவத்தை ஈசானுதி என்று சொல்லப்படும் என்க.

127. தொழிற்படு சாதாக் கியத்தினைச் சொல்லின்
நிழற்பொலி சகள நிட்களம் ஆகையால்
தஞ்சமில் ஈசா னுதிகள் தாமே
பஞ்ச சாதாக் கியமெனப் படுமே

(இ-ள்) நாதவிந்து ரூபமாய்ச் சிவலிங்கமான கன்மசாதாக்கியத்தைச் சொல்லுமிடத்துப் பரமசிவனது அதிகாரத்தானமாகிய சதாசிவம் சகளநிட்களம் ஆகையால் பஞ்சகிருத்தியத்தை ஈசானுதி சத்திகள் ஐந்தும் அதிட்டித்து யாவற்றினுக்கும் தஞ்சமாய் நிற்கும் ஈசானுதி குணங்கள் தாமே பஞ்சசாதாக்கியமாய் நின்றன என்க.

128. முதலீ சான முகமுதல் நான்கினும்
இதமுற வியாபித் திருக்கும் அதுதான்
பூசா காலம் புருடம்பார்த் திருந்தே
ஆசறு பூசாந் தத்தினில் முன்போல்
மோசமில் நாலு முகத்தினும் உறுமே.

(இ-ள்) முந்தின ஈசானுதிமுகமானவை சத்தியோசாதம், வாமம், அகோரம், தற்புருடம் என்னும் நான்கு முகங்களிலும் வியாபித்திருந்தாலும் பூசாகாலத்தில் ஆவாகனம் பண்ணுகையில் ஈசானம் சத்தியோசாதத்திலும் சத்தியோசாதம் வாமத்திலும், வாமம் அகோரத்திலும், அகோரம் தற்புருடத்திலும் வியாபித்துக் குறைவற்ற பூசாந்தத்தில் அருக்கியம் கொடுக்கையால் தற்புருடம் அகோரத்தையும், அகோரம் வாமத்தையும், வாமம் சத்தியோசாதத்தையும், சத்தியோசாதம் ஈசானத்தையும் ஆசரித்து நிற்கையால் ஈசான முகம் குற்றமற முன்போல நாலுமுகத்திலும் வியாபித்திருக்கும் என்க.

129. இவ்வணம் இலக்கணம் எய்துசதேசரை
அவமறு சத்தி சிவான்மிக மாகிய

இவ்விலிங் கந்தனில் சிந்தித் தந்தமில்
தொழிலது தொழிலில் ஒடுங்கு மேனும்
தொன்மொழி முறைமை யிணைமுக சாதாக்
கியத்தொழில் கிரியா பூசையுய்ப் பதுவே.

(இ–ள்) *கீழ்ச்சொன்ன இலக்கணங்களையுடைய சதாசிவநாயனாரைக் குற்றமில்லாத சத்திசியங்களுடைய வண்ணமையான சிவசத்தினிடத்திலே தியானித்து முடிவற்ற கிரியாபூசைக்கும் கன்ம சாதாக்கியரே கருத்தாவாக வேதாகமங்கள் சொல்லுகையால் ஐந்து திருமுகங்களுடைய கன்மசாதாக்கியரைத் தற்புருட முகத்திலே கிரியாபூசை பண்ணுவதென்க.*

130. சாற்று சதாசிவர் தம்திரு மேனி
ஏற்ற வித்தியா தேகம் இவர்தாம்
எல்லாம் அறியும் இயல்பது நயனம்
நல்லோர் உணர்வரு ஞானம திதயம்
ஈங்கிவர் பாக்கியம் எட்டும் சிரமாம்
ஓங்கள வின்மை உயர்சிகை பூரணம்
ஒள்ளொளி கவசம் பெருமை அத்திரமே.

(இ–ள்) *இவ்வாறு சொல்லிய சதாசிவநாயனாருடைய திருமேனி ஆன்மாக்களுடைய கன்மத்துக்கு ஈடாக அநுக்கிரகிக்கும் குணம் மந்திரமாகையால் மந்திரரூபமான சத்தி வித்தியா தேகம். சாதாக்கியம் என்றவும் அதிகாரத்தையுடைய பரமசிவனது இச்சா ஞானக் கிரியைகளால் சர்வ காரியங்களையும் அறிவித்து அறிந்து செய்யும் தொழில்களாகி நின்ற குணத்தின் உரிமையான இயல்பு நேத்திரம். முத்தான்மாக்களுக்கு உணர்த்தப்பட்ட அருட் சத்தி இதயம். பரமசிவனது இரணமான இச்சா ஞானக் கிரியை மூன்றும், இவர் பஞ்சகிருத்தியம் செய்யும் குணமாகிய ஈசானாதி ஐந்தும் ஆக எட்டுக் குணமும் ஐசுவரியமாக உடைத்து ஆகையாலும் இவை சதாசிவத்திலுக்குத் தலைமையான குணமாகையாலும் சிரம். (இங்கு இச்சை பிட்களம், ஞானம் மகேசுரம், கிரியை சதாசிவ மூலமாய் இலய போக அதிகாரமாகிய திருமேனி மூன்றும் கண்டபங்ல*

யாய் நின்ற பஞ்சபூதமான கலைகளை அதிட்டித்து நிற்கும் ஈசானாதி ஐந்தும் ஆக எட்டும் பதிக்கு ஐசுவரியம்). அநாதியிலே தனக்குச் சுதந்திரமாய்உள்ள சிவகரணம் மேலான சிரை. நிட்களத்தன்மையை மறைத்துநின்ற ஞானக்கிரியைகள் மிகுந்த பிரகாசம் கவசம். ஆன்மாவினுடைய அநாதிமலத்தைச் சங்கரிக்கும் பெருமை அத்திரம் என்பர் என்க.

131. முந்து மறைதெரி முதலா வரணம்
ஐந்து பிரமமோ டாறங் கமுமே
வீசிய உபயா வரணமும் இச்சைக்
கீசர் அநந்தா திகளெண் மருமே
மூன்று வதுகண முதல்வர்கள் எண்மரும்
நான்கா வதுமக வான்முதல் ஐந்திரு
பாங்கா ருலக பாலரும் ஆகும்
ஐந்தா வதுதச ஆயுதம் ஆமே.

(இ—ள்) அணுசதாசிவர் பதினொருபேரும் சிவதத்துவத்தைப் பெற்றுப் பிரதம ஆவரணத்திலும், அதிற்பக்குவரான அநந்தாதி அட்டவித்தியேசுரர் இரண்டாம் ஆவரணத்திலும், நந்தி முதலான அட்டகணேசுரர் மூன்றாம் ஆவரணத்திலும், இந்திரன் முதலான தசலோகபாலகர் நான்காம் ஆவரணத்திலும், தசாயுதங்கள் ஐந்தாம் ஆவரணத்திலும் இருப்பர் என மேலான வேதங்கள் சொல்லும் என்க.

இனி, இலிங்கபூசையில் ஆவரணங்களுடைய வியாத்தியைச் சொல்லுகின்றர்.

132. பஞ்சா வரணத் தலம்பக ரும்பொழு
தம்புய கேசரம் தனித ளந்தம்
பீட கண்டம் பிரகீட பீடம்
தேடரும் பிரமச் சிலையிவை ஐந்தே.

(இ–ள்) பஞ்சாவரணத் தலங்கள் சொல்லில் பதுமத்தில் கேசரமான கல்லபத்திரத்திலும், தளாக்கிரமான விகிருதவாரியிலும்ஞானருபமான பீடகண்டத்திலும்,கந்தபீஜாங்குரமானகிடபீடத்திலும்,அளவிடப்படாத ஆதாரசத்தியான ஆதாரசிலையிலும் முறையே கற்பாவரணம், வித்தியேசுராவரணம், கணேசுராவரணம், லோகபாலராவரணம், அத்திராவரணம் வியாபித்திருக்கும் என்க.

133. அமலன் இருந்தருள் அம்போ ருகத்தின்
சமமில் கிழங்கு தான்பிர மாண்டம்
கருதிய புனல்முதல் கலைமுடி வாய
இருபத் தொன்பது தத்துவ நாளம்
புறவிதழ் மாயை அகஇத ழாவது
விறல்கெழு சுத்த வித்தை கேசரம்
கன்னிகை எண்ணெண் கலைகுண் டலியா
வித்தையைம் பத்தோ ரக்கர மதனில்
கருதிய கேசரம் கன்னிகை அதன்மேல்
பரவிய வட்டம் பருதி மதிதீ
மருவிய சத்தி எனவிரி மண்டலம்.

(இ–ள்) நின்மல சிவனுடைய அதிகாரத் தானமாகிய சதாசிவர் எழுந்தருளியிருக்கும் பதுமத்தினுடைய ஒப்பற்ற கிழங்கு பிரமாண்டமாகிய பிருதிவி தத்துவமாம். அப்புமுதல் கலை ஈறாகச் சொல்லிய இருபத்தொன்பது தத்துவமும் நாளமாம். அமரேசன் முதலிய புவனம் எழுபத்திரண்டும் நாளத்தின் கண்டங்களாகிய மூன்றுகளாம். புத்திகுணமாகச் சொல்லப்பட்ட பஞ்சா சற்பாவம் நாளத்தின் சூத்திரமான நூலாம். புறஇதழைச் சமைந்து நிற்கும் முடிச்சுப் படம் மாயா தத்துவமாம். உள்ளிதழ் சுத்தவித்தியா தத்துவமாம். வெற்றியினையுடைய சுத்தவித்தியாபுவன கலாசத்திகள் அறுபத்துநாலும் கேசரமாம். கன்னிகை அறுபத்துநாலு கலை ஆதாரமான குண்டலியாம். வித்தை ஐம்பத்தோரக்கரமாம். இதனில் வட்டம், கேசரத்தில் வட்டம், கன்னிகையில்வட்டம், அதன் மேற் பரவியவட்டம் ஆகிய நான்கும் ஞானம் கிரியை இச்சை ஆதி என்னும்

சத்திகளால் வியாபிக்கப்பட்ட சூரியமண்டலம், சோமமண்டலம், அக்கினி மண்டலம், பொருந்திய சத்திமண்டலம் எனவிரிந்த மண்டலமாகச் சொல்லப்படும் என்க.

134. மேதினி யில்உயர் வித்தை வியாத்தி
ஆன சத்தி மண்டலம் அளவாய்த்
தீயன இலாத சிவாதன மாகும்
தடமலி சாதாக் கியமுதற் சமனை
முடிவா கச்சிவ மூர்த்திய தாகும்
தரைமுதல் உன்மனை அளவும் நிலாவிய
பரைசிவன் பூரண மூலம் எனப்படும்.

(இ-ள்) பிருதிவிமுதல் மாயை ஈறான முப்பத்தொரு தத்துவங்களையும் அதிட்டிக்கும் சுத்தவித்தையினுடைய வியாத்தியான சத்திமண்டலம் என்னும் அபரவிந்து அபரநாதம் பரவிந்து பரநாதமாய் வாக்குக் குற்றமில்லாத சிவாதனமாவது:-தத்துவம் முப்பத்தாறையும் இதற்குபாதானமாகிய மகாமாயை என்னும் குடிலையும் ஆதனமாம். சகளநிட்களமாய் நின்று அநுக்கிரகத்தைப் பண்ணும் சதாசிவமாய்நின்ற சுத்ததத்துவம் இருபத்து மூன்றும், இவற்றை அதிட்டிக்கும் சமனை உன்மனையும் பரமசிவனுக்குத் திருமேனியாம். சத்தி உபாதிகளைத் திருமேனி என்றும், பிருதிவிமுதல் பரை ஈறாக வியாபித்துநிற்கும் பரமசிவனுடைய தன்மையை மூலம் என்றும் கூறப்படும் என்க.

135 இப்படித் தரைமுதல் சமனை ஈறுய்ச்
செப்பவி யாபிக்கும் பரம சிவனது
பொருவி லுயர்பரி பூரணம் தன்னை
அறிவில் அழுந்துதல் ஆவா கனமே.

(இ-ள்) இவ்வாறு மூலமந்திரத்தால் தரிசிக்கப்பட்ட மேலான குற்றமற்ற பரிபூரணத்தைச் சிவப்பிரசாதமாகிய அருளினால் அறிந்து அதிலே அழுந்துவது ஆவாகனமாம் என்க.

*இனி, ஆவாகனம் என்றும் அபிமுகீகரணம் என்றும் ஆவாகனம் இருவகைத்து. பிரதிட்டாகாலத்திலே சர்வசங்காரம் அளவாகிய சிவலிங்கத்தில் சாந்நித்திய மாவதற்குப் பண்ணும் சிவ நியாசம் தினந்தோறும் பூசாகாலத்தில் சிவலிங்கத்தில் எழுந்த நக்கும் சதாசிவனது நிட்களமாய நான்கு முகத்திலும் வியாபித்திருக்கிற ஈசானமுகம் தன்னைப் பார்க்கும்படியாகப் பண்ணுவது அபிமுகீகரணம் ஆம்.*

136. அலையா தழுந்த நிலைபெறல் தாபனம்.

*(இ-ள்) மேற்சொன்ன அழுந்தும் நிலைபெறுகைப் பொருந்துவது தாபனம் என்க.*

137. இவன்தன தறிவு சிவன் பூரணத்திலும்
சிவன்பூ ரணத்துவம் இவன்தன தறிவிலும்
ஒன்றையொன் றகலா துறவுசெய் திருப்ப
தொன்றிய சந்நி தானமென் றுரைப்பர்.

*(இ-ள்) பெத்த நிலையில், சிவனது அறிவுக்கும் அறிவாகிய பூரணம் உள்ளளவும் இவன் அறியும் தாசோக? அறிவும், இவனது தாசோகமாகிய? அறிவு உள்ளளவும் சிவனது அநுக்கிரகமும் இடைவிடாமல் ஒன்றி அந்யோந்யமாகும் தன்மையைச் சந்நிதானம் என்றுரைப்பர் என்க.*

138. இவனிடத் துறும்அறி வென்றும் ஒழியாச்
சமையது தானே சந்நிரோ தனமே.

*(இ-ள்) கீழ்ச் சொன்ன தன்மையாகிற இரண்டறுதல் ஒழியாமல் இருக்கிற அறிவே சந்நிரோதனம் என்க.*

139. பாத்திய வாசம் அருக்கியம் பழுத்தல்
ஆன்ம சுத்தி நிமித்த மாகவும்
நறுமல ரதனை நல்வீட் டின்பம்
குறுகுதல் ஏது வாகவும் கொடுத்து.

(இ-ள்) கீழ்ச்சொன்ன நிலையில் சிவனுடைய பிரகாசமாகிய இச்சா ஞானக்கிரியைகள் பொருந்தின தானமாகிய சீர்பாதத்தில் பொருந்துவது பாத்தியம். சத்திகளுடைய விளக்கத்தில் அருள் என்னும் தன்மையையுடைய திருமுகத்தில் பொருந்துவது ஆசமனம். திருமுகம் என்னும் அருளைக் கழலும் தன்மையாகிய திருமுடியில் பொருந்துவது அருக்கியம். இவை சத்தி காரிய மாதலால் தனுகரண புவன போகமாகிய குற்றத்தைக் கழன்றிருக்கையே ஆன்மசுத்தி. சுத்த சைதன்னிய புட்பத்தை நிட்களத் தியான பரம சிவனிடத்தில் சாயுச்சிய ஏதுவாகக் கொடுக்க என்க.

கிரியாபூசை பண்ணுமிடத்து மகேசுரமாகிய பாதத்திலும், சதாசிவமாகிய முகத்திலும், நிட்களமாகிய முடியிலும், பாத்திய ஆசமன அருக்கியங்களை ஆன்மசுத்தி நிமித்தமாகக் கொடுத்து நிட்களமான ஆனந்தம் பெறுகைக்கு முடியிலே புட்பம் சாத்துவதாம். என்க.

140. நிகழ்சல சுத்தி நிமித்த மாக
மகிழ்வுட னேதிரு மஞ்சனம் பண்ணி,

(இ-ள்) அருட்போதமே மலமாகையால் அந்தப்போதமாகிய மலத்தை நீக்கத் திருமஞ்சனம் ஆட்டுவது என்க.

141. நீங்கரும் கரும சுத்தி நிமித்தம்
தீங்கறு தத்துவத் திரயம் சாத்தி.

(இ-ள்) போதம் கழலும் அவதரத்தில் மனோவாக்குக் காயத்தால் வந்த கன்மவாதனையைக் கழற்றுவது குற்றமற்ற தத்துவத்திரயம் என்க.

சஞ்சித ஆகாமிய பிராரத்துவம் நீங்குவதே தத்துவத்திரயமாம்.

142. ஞான விளக்கம் நண்ணுதற் பொருட்டுத்
தூப தீபம் துதைந்தினி தளித்து.

(இ-ள்) வாதனையைக் கழற்றுவது கிரியாசத்தி ஆதலால் அந்தக் கிரியாசத்தி தூபமாம், ஞான சத்தியின் வாசமாகிய ஞான

விளக்கமாயிருத்தல் தீபமாம். ஆகலின், அறியாமையை நீங்கி அறிவைக் கொடுக்கப் புகுவதே தூபதீபம் என்க.

143. சட்குணம் தனக்குச் சார்தற் பொருட்டுப்
பொக்கமில் போகாங் கம்பூ சித்து.

(இ-ள்) சர்வஞ்ஞத்துவம், பரிபூரணத்துவம், அநாதிபோதத்துவம், சுதந்தரத்துவம், அலுப்தசத்தித்துவம், அநந்தசத்தித்துவம் என்னும் சிவகுணம் ஆறும் பெறுதல் மெய்யாகிய போகாங்க பூசை என்க.

சிவபோகத்துக்கு அங்கமாகிய சிவகுணங்களைப் பெறுதலே போகாங்கபூசையாம் என்பர்.

144. பின்மன அமைவு பிறத்தற் பொருட்டு
நைவேத் தியமுக வாசமும் நல்கி.

(இ-ள்) அநாதியிலே இருத்தியத்தையுடைய சிவனுக்குப் பராபர போதக்கழற்றியே இருத்தி ஆதலால் பராபர போதமாகிய தற்போதத்தை நைவேத்தியமும் முகவாசமுமாகக் கொடுப்பது என்க.

பெத்தத்தன்மையின் நிறைவே நைவேத்தியம்; நிறைவு குன்றுமையே முகவாசமாம்.

145. மூவகைத் துக்கம் முடிகையின் பொருட்டுப்
பாவக மான பவித்திரம் சாத்தி.

(இ-ன்) ஆதிதைவிகம், ஆதிபௌதிகம், ஆத்தியான்மிகம் என்னும் மூவகையான வாதனையாகிய துக்கத்தை நீக்குவது பாவிக்கப்பட்ட பவித்திரம் என்க.

மனோ வாக்குக் காயம் இறந்தவிடத்தில் மூன்று அப்பால் அதிட்டிக்கின்ற இச்சா ஞானக் கிரியையினது உண்மையைப் பொருந்துவது பவித்திரமாம்.

146 எல்லா நன்மையும் எய்துதற் பொருட்டு
நல்ல செபத்தை நயந்துமி வேதித்து.

(இ-ள்) சர்வகுணங்களும் கழன்று மோட்சம் பெறுதற்கு அகார உகார மகார விந்து நாதத்தின் கழற்றியே செபம் ஆதலால் செபமாகிய உரையை நீக்குவது செபம்வேதனம் என்க.

மூலமந்திரத்தை இலயாந்தமாக உச்சரித்து மேலான பஞ்சாக்கரத்தின் நிலையைக் கூடுவது செபநிவேதனமாம்.

147. அயன்மால் இவர்கீழ் ஆகையின் பொருட்டுச்
சயமாம் புறவெதிர் தண்டம் பண்ணி.

(இ-ள்) தற்போதம் என்னும் அதிகாரத்தை நடத்தும் பிரம விஷ்ணுக்களால் ஞானக் கிரியைகளின் நீங்கி நாயகன் அடிமையாய் நிற்கும்தன்மை நமஸ்காரம் என்க.

வணங்குகிறவர்கள் பிரம விஷ்ணுக்கள் ஆகையால் அவர்கள் தொழிலையும் அவர்கள் அதிட்டிக்கும் சூக்குமமான ஞானக்கிரியைகளான அதிகாரத்தையும் நீக்குவதே நமஸ்காரம்.

148. அகண்டமதாகிய அமலனை இப்படிச்
சகளமதாகத் தான்பூ சித்தபின்
அகள சகளம் ஆகையின் பொருட்டு
முகனுறச் செபித்தபின் முன்போல் நிட்களம்
தானு கவும்செப தற்பணம் பண்ணி.

(இ-ள்) நின்மலனாகிய பரமசிவனது சத்தியுபாதிகளைத் தரிசித்தல் பூசை. இப்படி சகல பூசையும் பண்ணின பின்பு அந்தச்சத்தி உபாதிகளையும், அவற்றை நடத்தும் சிவோபாதிகளையும் பின்னை மறந்தரிசித்தல் செபதற்பணம் என்க.

பஞ்சகிருத்தியத்திற்கு அப்பாற்பட்டுச் சத்திபுபாதி சிவ உபாதிகள் அற்று முன்புள்ள நிட்கள பாவத்தைத் தரிசிப்பது செபதற்பணமாம்.

149. தாணுவை விட்டுத் தான்பிரி யாமல்
வேணும் என்று மீளவும் பூசித்

தலைவற வேதான் அமல னிடத்தில்
நிலைபெற வேண்டித் தனைநிவே தித்து.

(இ-ள்) கிருத்திய காரணமான பரிவத்தை அடைந்தவன் மீண்டும் பஞ்சகிருத்தியத்தில் அகப்படாதிருக்கவேயே அட்டபுட்ப மாகச் சாத்தி, ஆன்மகாரியமாகச் சிவன் உபாதி அடைந்தாலும் ஆன்மா சிவோபாதியைப் பொருந்தாமல் அதற்கு அந்தமாய் ஆதி வற்று நின்மலமாய் உள்ள பரசியத்தில் சலனமற்று இருப்பதே ஆன்ம நிவேதனம் பார்க்க.

150. அசுத்ததத் துவங்களை அந்நியம் ஆக்கி
உறச்சிவ பரிபூ ரணமுள அளவும்
மிகுத்துணர் ஞான விழியாற் பார்த்து
நிலைபெறு சுத்தமு மாய்நின் மலமாய்
நல்லசத் தியமாய் ஞான மயமாய்
ஆதி அந்தம் ஓதுவ தன்றாய்
யாதொன் றினும்பிறி வின்மை யுடைத்தாய்
முந்நூற் றறுபான் மூன்றும் எனச்சொலும்
நூற்சம யிகளால் அறிய வரிதாய்ச்
சாந்தமு மாயுரை தருநிட் களமாய்
ஏந்தா னந்தமு மாயந் நியமாய்
நியதி காலங் களைநீங் கியதாய்த்
துயர்தீர் காரிய சூனியம் ஆகிக்
காரண சூனிய மாகிக் கம்பமற்
றுரையுணர் விறந்த தாகி யுயர்ந்த
பரம சிவனது பாங்கினில் ஆங்கே
திருமிகு ஞான நேத்திரம் சேர்த்திச்
சேருமிந் நிலைமையைத் திவ்விய ஞானத்
தாலறி தல்பரா முகவருக் கியமே.

(இ-ள்) பந்தமாயுள்ள முப்பத்தொரு தத்துவங்களையும் அந்நியமாக்கிக் கிரியை ஆகிய சுத்தவித்தியாபுவனத்திலிருந்து மகேசுரம் முதல் அஞ்ஞானம் ஈறான சிவோபாதிகளையும் இவற்றில்

வியாபித்திருக்கும் பரிபூரணமாகிய பரசிவத்தையும் மேலான அறிவினால் அறிந்து, தான் அதற்கு அந்நியமாயிருந்து அநாதிசுத்தமாய், மலரகிதமாய், நல்ல உண்மையாய், அநுபவமே வடிவாய், முதல் நடு இறுதி அற்றதாய், சர்வான்மாக்களுக்கும் உயிர்க்குயிராய், மாயாவாதிமுதல் ஐக்கியவாதி ஈறான முந்நூற்று அறுபத்துமூன்று சமயிகளாலும் அளவிடுதற்கு அரிதாய், விகாரமற்றதாய், நிட்களம் என்று சொல்லப்பட்டுள்ளதாய், வேறுபாடு இல்லாததாய், காலம் நியதிக்கு அப்பாலாய், போகத்தை நீக்கும் காரியதத்துவமான நாத விந்துகளுக்கு அப்பாலாய், அதற்குக் காரணமான ஞானக்கிரியைகளை நீங்கியுற்றதாய், அசைவற்று வாக்கு மனதீத கோசரமாய், மேலான அநுபவசிவனிடத்தில் தன்மையிருந்த அருள்நோக்கால் அடைந்து, அப்படி அநுபவ நிலையை அடைந்த தன்மையும் அறிந்து நிற்பது பரமார்த்த அந்தரியாகம் என்க.

151. இந்த நிலையிற் றரிசனம் என்றும்
நந்தா திருப்பது ஞான பூசை
அந்தரி யாகமும் ஆம்புற யாகமும்
இந்த நெறியிரி வில்லா தாதலிற்
புத்தியில் ஞான பூசையென் றதுவே.

(இ-ள்) கீழ்ச்சொன்ன தரிசனம் அந்தரியாக பூசை ஆதலால் ஞானக்கிரியை சேர்ந்து தொழிலுடன் கூடியுள்ள பகிர்முகமாகிற கிரியாபூசையிலும் இந்தத் தரிசனம் ஒழியாதிருத்தலால் அந்த இரு வகைப்பட்ட பூசைகளும் ஒருதன்மையாய் அறிதல் ஞானபூசை. இந்தத் தரிசனம் அன்றிப் பகிர்யாகமாகிற கிரியா பூசையே பிரதானமாய் அந்தரியாகத்திற் சிறிது தரிசனமும் கூடி அந்தரியாகம் என்றும், பகிர்யாகம் என்றும் பூசிப்பது பொய்யாத கிரியா பூசையாம் என்க.

152. இப்படி இடையற இதய கமலத்
தற்புத முதல்வனை அருச்சனை புரிபவர்
தப்பற அடைகுவர் சாயுச் சியமே.

(இ-ள்) இப்படிச் சொல்லப்பட்ட தரிசனம் ஆகிய ஞான பூசையிலே அற்புத முதல்வனாகிய அருளே பாதமாக சிவனைப் பூசை பண்ணும் சிவன் முத்தர் சிவமே தான சாயுச்சியமே பெறுகை சந்தேகமில்லை என்க.

ஞான, சதாசிவமூர்த்திக்கு ஆதாரம், மூர்த்தி மூலம், முதலியன வருமாறு :—

தானம்—பதுமமாம். அதன் கிழங்கு பிருதிவியாம். அப்பு, தேயு, வாயு, ஆகாயம்; சோத்திரம், தொக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம்; சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம்; மனம், புத்தி, ஆங்காரம், சித்தம்; புருடன், அராகம், வித்தை, நியதி, காலம், கலை ஆகிய இவை இருபத்தொன்பதும் நாளமாம். அமரேசன் முதல் சிகேதனன் ஈறான புவனம் பாதபத்திரசன்னிவேசத்தின் முள்ளுகளாம். புத்தி குணங்களாகச் சொல்லப்பட்ட பஞ்சாசத்பாவங்கள் நாளத்தின் சூக்குமமான நூலாம். புறவிதழாகச் சார்ந்து சூழ்ந்த முடிச்சுப்படம் மாயையாம். உள்ளிதழ் சுத்தவித்தையாம். கலாசத்திகள் அறுபத்து நாலும் கேசரமாம். மகேசுரம் காயில் வட்டமாம். சதாசிவம் விதையாம். வட்டம் சத்தியாம். இங்ஙனம் பிருதிவி முதல் சத்தி ஈறான முப்பத்தைந்து தத்துவங்களும் சதாசிவநாயனாருக்கு ஆதாரமாம்.

அபரவிந்து கலைகளும் அபரநாத கலைகளும், பரவிந்து கலைகளும் பரநாத கலைகளும், பஞ்சசத்திகளும் சதாசிவநாயனாருக்கு மூர்த்தியாம்.

பிருதிவி முதல் சமனை ஈறாக வியாபிக்கும் பரமசிவன் சதாசிவநாயனாருக்கு மூலமாம் என்க.

திருச்சிற்றம்பலம்.

---

# திருவிழாவரலாறு.

---

*முதல் விழா–பிரகிருதி நடனம், இரண்டாம்விழா இருவினை நடனம், மூன்றாம் விழா முக்குண நடனம், நாலாம் விழா அந்தக்கரண நடனம், ஐந்தாம் விழா பஞ்சேந்திரிய நடனம், ஆறாம் விழா காமாதி ஆறுன நடனம், ஏழாம் விழா சப்தகோடி மகாமந்திர பத நடனம், எட்டாம் விழா வித்தியாதத்துவமும் ஆணவமும் நடனம், திருக்காப்பு நாள் இரோதாயி நடனம், திருச்சாந்து திருவெழுச்சியில் நவபத நடனம், திருவிழாப் புறத்தில் சத்தி முத்தி நடனம், திருவனந்தலில் வாதனை நடனம், பத்தாம் விழாவில் பேரின்பாநந்த நடனம், பதினோராம் விழாவில் பதி பசு பாச நடனம் என்க.*

சீகாழிச் சட்டைநாத வள்ளல்
அருளிச்செய்த
சதாசிவரூபம் மூலமும்–பழையவுரையும்
முற்றுப்பெற்றன.

*திருச்சிற்றம்பலம்.* *திருச்சிற்றம்பலம்* *திருச்சிற்றம்பலம்.*

ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.

ஸ்ரீ பஞ்சாக்கர தேசிகர் பதமலர் வாழ்க.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் மலரடி வாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சதாசிவரூபம்

## செய்யுள் முதற்குறிப்பகராதி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மலமெனுந் தடத்திற் கருமசே தகத்தின்
        மாயையாங் கிழங்கிலங் குறித்து
மன்னுமு வெட்டாந் தத்துவ நாள
        மலரிதழ் வித்தையேழ் வித்தை
நலமிகு மீசன் சதாசிவ மிரண்டு
        நண்ணுகே சரங்களாஞ் சத்தி
நற்பொருட் டாது நாதமே விந்து
        நயந்தகன் றுமென விரவி
இலகுமென் றுடலப் பதுமமீ டிகைமீ
        யிருந்தரு ளாசன மெனுமல்
லெனலுபுக் கிலதா யெண்ணினேன் றெளிய
        வியலருட் பார்வையைத் தலையே
அலகிலா வுயிர்கண் மலநடைக் கிலையா
        யருணடைக் குண்மையாய் நின்ற
ஆவடு துறைநசை யம்பலவாண
        வடியவர்க் கருளுமா நிதியே.

திருச்சிற்றம்பலம்.

— உலகுடையநாயனார்.

உ

சிவமயம்

# குருமரபு வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

“கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி
காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான
பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி
வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி
தழைக மாதோ.”

திருச்சிற்றம்பலம்

— ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவபுண்ணியத்தெளிவு

## காப்பு

### கலிவிருத்தம்

பழகிய பதித்துவப் பான்மை எய்தவும்
முழுகிய பசுத்துவ முற்று நீங்கவும்
ஒழுகிய முப்பொருத் தெளிவுகொள் ஞானமார்
அழகிய பிள்ளையார் அடிகள் போற்றுவாம்.

### சபாநாதர் துதி

உடலினும் உயிரினும் ஒன்றி நின்றருள்
குலவிய ஒளியுயிர் குறிக்க ஐந்தொழில்
இலகிய மன்றினுள் எழில் நடஞ்செய்வோன்
வளர்திரு மலரடி வழுத்து வாமரோ. (1)

### சிவகாமியம்மை துதி

ஒற்கமில் இருண்மலத் தொளியின் நீங்கியே
நற்கதி பெறவருள் நயந்து போற்றுவாம்
சிற்கனன் தன்னொடு சிறப்பின் ஓங்கியே
கற்கொளி போன்றுளாள் கமல பாதமே. (2)

### விநாயகர் துதி

விடமணி களனென விளங்கித் தோன்றவே
தடமலர் நீர்கொடு தாழ்ந்து போற்றுவாம்
வடவரைப் பாரதம் மருப்பிற் றீட்டுமா
கடகரி முகத்தவன் கமல பாதமே. (3)

## சுப்பிரமணியர் துதி

அந்தமா தியுமிலா ஆண வத்தொடும்
பந்தமா னவைகெடப் பணிந்து போற்றுவாம்
சந்தமார் தடவரைத் தமிழ்க்க டற்கருள்
கந்தவேள் பூங்கழற் கமல பாதமே. (4)

## நந்திதேவர் துதி

ஓதுமுப் பொருளையும் உணர்த்து நாற்பதத்
தாதியா கமந்தழீஇ அதனைப் பன்னிரு
போதசூத் திரமதாப் புகன்ற நந்திதன்
பாதபங் கயமலர் பணிந்து போற்றுவாம். (5)

## அகத்தியமுனிவர் துதி

சகத்துயி ருண்மலத் தறுவின் நீக்கியே
அகத்தினுள் அவையெலாம் அடக்கு வாய்மையாம்
மகத்துவம் எமக்கருள் மலயத் தோங்குசீர்
அகத்தியன் திருவடிக் கன்பு செய்குவாம். (6)

## காரைக்காலம்மையார் துதி

கொம்மைசேர் வரிமுலைக் கூற னார்தமைச்
செம்மைசேர் கயிலையிற் சென்று போற்றியே
இம்மையே சிவகதி எய்து காரைக்கால்
அம்மைதாள் மலர்முடிக் கணிகு வாமரோ. (7)

## திருஞானசம்பந்தசுவாமிகள் துதி

பிறையணி மௌலியன் பேதை யாளொடும்
சிறையணி புனற்றடத் தீர மேவியே
நிறையமு தருத்தவுள் நெகிழப் பாடினான்
மறையவன் மலர்ப்பதம் வணங்கி வாழ்த்துவாம். (8)

## திருநாவுக்கரசுசுவாமிகள் துதி

திரைபொரு கடலிடைச் செறித்துத் தீயமண்
புரையினர் விடுசிலை புணைய தாகவே
உரைதரும் ஐந்தெழுத் துணர்ந்து பாடலாற்
கரைவரும் அப்பர்தாள் கருது வாமரோ. (9)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி

அந்தரம் இழிந்தவெள் ளானை மீதுநீடு
மந்திர வெள்ளிமா மலையின் ஏறிய
சந்திர சேகரன் சரணம் சேர்தமிழ்ச்
சுந்தரன் அடிமுடி சூட்டு வாமரோ. (10)

## மாணிக்கவாசகசுவாமிகள் துதி

பேதவூர் தருகர ணெறி பின்னிட
காதவூ ரகன்றுமெய்ஞ் ஞானநாட் டத்தாற்
போதவூர் புகுந்துநம் போக மேற்கொளும்
வாதவூ ரடிகளை வணக்கம் செய்குவாம். (11)

## திருத்தொண்டர் துதி

நீக்கியா ரிருண்மலம் நிறைந்த பேரொளி
ஆக்கியே மனாலயத் தகன்ற நோக்கினால்
நோக்கியே பேருயர் நோன்மை பெற்றசீர்ப்
பாக்கியத் தொண்டர்தாள் பணிகு வாமரோ. (12)

## மெய்கண்டதேவநாயனார் துதி

நற்றமி ழாற்சிவ ஞான போதநூல்
சொற்றுயிர்க் கியல்பதாம் சுகோத யம்தரக்
கற்றவன் வெண்ணெய்மெய் கண்ட தேசிகன்
பொற்றமார் குழைகழல் குழைந்து போற்றுவாம். (13)

## சிவபுண்ணியத்தெளிவு

### அருணந்திதேவநாயனார் துதி

புன்னெறி அகற்றிய போத சூத்திரத்
தின்னெறி விளங்கநூல் இலங்கச் செய்துமேல்
நன்னெறி காட்டருணந்தி தேசிகன்
தன்னிரு பங்கய சரணம் போற்றுவாம். (14)

### உமாபதிதேவநாயனார் துதி

சொற்றரு முதல்வழித் தன்மை நான்மறை
கற்றொளிர் சிவப்பிர காச நூல்புகல்
கொற்றவன் குடிவரு குரவன் எம்மையாள்
நற்றவன் பதம் அகம் நாட்டு வாமரோ. (15)

### குகைமறைஞானதேசிகர் துதி

மாசிலா கமமெலாம் வாம்பு கண்டுயிர்ப்
பாசிவே ரறத்தமிழ்ப் பனுவல் செய்தவன்
தேசமார் குகைமறை ஞான தேசிகன்
வாசமா மலர்ப்பதம் வணங்கு வாமரோ. (16)

### சத்தியஞானதேசிகர் துதி

சித்திசேர் வெண்ணெய்மெய் கண்ட தேசிகன்
பத்திசேர் மரபினைப் பரித்த பண்டிதன்
முத்திசேர் சிவபுர முதல்வன் எம்மையாள்
சத்திய ஞானிதன் சரணம் போற்றுவாம். (17)

### அவையடக்கம்

புன்சொலா நரகினைப் புகுத்திக் கேட்பவர்க்
கின்சொலா யினுமஃ திழுக்கற் பாலதாம்
நன்சொலாம் சிவகதி நல்கு மேயெனில்
புன்சொலா யினுமிகப் போற்றும் தன்மைத்தால். (18)

கண்ணுதல் புகழினைக் கருதி டாவெனில்
பண்ணவர் மொழிகளும் பழியின் பாலவாம்
அண்ணல்தன் புகழ்புகல் அடிய னேன்மொழி
தண்ணிய வாயினும் புகழிற் சாருமால். (19)

---

## நூற்சிறப்பு

### அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

அழுக்கிலா அநாதி முத்தன் அகண்டித துரியா தீதன்
இழுக்கில்வே தாக மங்கள் இயம்பினன் பொதுச்சி றப்பென்
றொழுக்கமா ருலகத் தோர்க்கும் ஒங்குசத் திநிபா தத்தின்
வழுக்கிலா தவர்க்கு மென்றே மதித்தனர் நால்வல் லோரே. (20)

சீவனைச் சிவத்தி னொன்றச் சேர்க்குஞ்சித் தாந்தத் தோர்க்கும்
சீவனைப் பரத்தி னொன்றச் சேர்க்கும்வே தாந்தத் தோர்க்கும்
பாவனை இரண்டும் ஒன்றே பரமஞா னத்தோர்க் கெல்லாம்
மேவிய கரும காண்டம் விளம்பிடிற் பேத மாமே. (21)

சுருதியின் மிருதி முற்றும் சொற்றிடும் புராணம் எல்லாம்
கருதுபுண் ணியங்கள் தத்தம் கதிபசுத் துவமே காட்டும்
பொருதிமி ரகற்றிச் சைவம் புகல்சிவ புண்ணி யந்தான்
வருதியென் றருளாற் சாலோ காதியை வழங்குமன்றே. (22)

ஆரணம் புகன்ற வாற்றால் அக்கினிட் டோம மாதி
சீரணி விரத நாற்சாந் திராயணம் செய்கின் றோர்கள்
பூரண விமானத் தேறிப் பூமியந் தாசு வர்க்கத்
தோணி புனித ராகி இன்பொடும் போகம் துய்ப்பார். (23)

ஓசைகொள் அசுவ மேதம் ஒருநூறி யாகம் செய்தோர்
வாசவன் பதத்திற் சேர்வார் மற்றிவர் அனந்த கோடி
நேசமார் மகத்தி னாலும் நிறைசிவன் தொண்டர் தாமே
பேசசாட் டியத்தாற் சேரும் பெரும்பதம் அடையார் மன்னோ. (24)

களித்திடு மிவைச ரீர கன்மமென் றமைந்த வாற்றால்
விளித்துயி ரினைப்பி றப்பில் வீழ்த்திடும் அதனுல் ஆவி
குளித்திடும் மலத்தை நீக்கிக் குரைகழல் காட்டும் ஈசன்
தெளித்திடு சிவாக மத்திற் செப்புபுண் ணியங்கள் தாமே. (25)

ஆதியில் அநாதி சச்சி தாநந்த அமலன் தானே
ஓதிய விமல ஞானம் உணர்வுயிர்க் குருமை நோக்கிச்
சோதிசேர் கருணை மேனி தொடக்கிப்பின் அருளாற் கூறும்
நீதிசேர் காமி காதி நிறைமொழி இருபத் தெட்டாம். (26)

இங்கிவற் றின்பே தங்கள் இருநூற்றே ழாம வற்றுள்
துங்கமார் நந்திக் கெந்தை சொற்றவா கமங்கள் தம்மில்
தங்கு சிந்திய விசுவ சாதாக்கியம் தன்னின் மன்னும்
பொங்குபுண் ணியத்தை யானும் தமிழினுற் புகல லுற்றேன். (27)

## நூற்பெயர்

உலகினுக் கிதம தாயும் உயிர்க்குறும் சித்தி யாயும்
பலமுறக் கொடுப்ப தாயும் பகருமுத் தமம தாயும்
குலவுபுண் ணியத்தை ஈசன் கூறிட நந்தி கேட்டே
புலமுற இதற்கு நாமம் புண்ணியத் தெளிவென் றானல். (28)

---

## நூல்

### கோபுரசிகரம் தரிசிக்கும் பலன்

பிறையணி சிகரம் தூரப் பிறங்கிடத் தரிசித் தேபின்
அறைகழற் கமல பாதத் தடிகளா லயத்து ளேகி
முறையுறப் பணிந்தார் முன்னம் முற்றிய உடலம் தோறும்
இறையுறப் புரிந்த பாவம் தீர்தலக் கணத்தில் திண்ணம். (29)

### வழிநடந்துவந்த இளைப்போடும் வலம்வரும் பலன்

*வழியினில் அதிதூ ரத்தில் வந்திடும் இளைப்பி னோடும்*
*விழிநுதல் அமலன் கோயில் மேவியே வலஞ்செய் வோர்தாம்*
*மொழியதற் கிலேசத் தோடும் முயன்றமுற் பாவ மெல்லாம்*
*அழிவுறப் புரிவன் எங்கோன் அருந்தவம் இதன்மே லுண்டோ.* ()

### ஆசாரியர் இருக்கும் மடாலயத்தையும் அவர் திருமேனியையும் வலம்வரும் பலன்

*இன்னவை குரவன் றங்கும் எழில்கொள்மா லயத்திற் செய்தோர்*
*சொன்னமுற் பலத்தி னட்ட குணமுடையர் சொன்ன ஞானம்*
*மன்னிய குரவன் மேனி மகிழ்வுறத் தொழுது நின்றோர்*
*பின்னும்வே ளையிலைக் கண்ட பெருந்திரு குணிதம் சேர்வார்.* (31)

### ஆசாரியரைப் பணிந்து துதிக்கும் பலன்

### வேறு

*பதியைப் பணியும் பலத்திரட்டி பரம குரவற் பணிவோர்க்கு*
*வதியு முயிர்க்கு முயிராகி வளரு ஞான வரோதயன்பால்*
*துதியிற் சதமாம் தேசிகனை த்துதிப்போர் தமக்குத்தொகும்பலமென்*
*றதிக மறைகள் அறைதலினல் அவன்றன் பெருமை அளப்பரிதே.* ()

### ஆசாரியருக்குப் பணிவிடை செய்யும் பலன்

*பாச மகற்றும் தேசிகற்குப் பரிவால் என்றும் பணியதனை*
*நேச முறவே புரிந்தோர்க்கு நிகழும் பரம சிவயோகம்*
*ஆசை பெருக்கும் போகவிதம் அடையக் கருதின் அவர்குரவன்*
*வாச மலர்ச்சே வடியிணைகள் மகிழ்ந்து பாங்கால் வணங்குகவே.* ()

### திருவிழாவில் வலம் வருதலுக்கும் ஆசாரியர் பின் வருதலுக்கும் பலன்

*அட்ட மூர்த்தி அமலேசன் அணியார் விழவில் வலம்வருவோர்க்*
*கிட்ட முறவோரடிக்கடிக்கும் இயற்றும் பரிமே தப்பலனும்*

சிட்டர் பரவும் தேசிகன்பின் செல்கின் றோர்க்கும் பலமிஃதே
கட்ட மலமும் வினையுடலும் கழித்துச் சிவத்திற் களிப்பாரே. (34)

## துவசாரோகணம் செய்யுங்காலத்தில் அதன்பின் வலம்வரும் பலன்

பந்த மான பசுபாசப் பகைவன் இடபக் கொடியேற்றும்
அந்த வேலை தனிற்சென்றே அழகார் கொடிப்பின் வலம்வருவோர்
புந்தி களிகூர் தமனியமும் பொன்னும் மகவும் பௌத்திரரும்
சிந்தை களிப்பக் காசினியிற் செல்வம் பெருகத் திளைப்பவரே. (35)

## துவசாரோகண நிவேதனத்தின் பலன்

வடமே ருவினைச் சிலைவளைத்த வரதன் இடபக் கொடியேற்றில்
படமார் இடப நிவேதனத்தைப் பரிவால் அருந்தும் பைந்தொடிதான்
திடமே மலடி என்றிடினும் சிறந்த மகவைப் பெற்றிடுவள்
விடமார் கண்டத் தமலேசன் விளம்பு நூலின் விதியிதுவே. (36)

## திருவிழாவில் நாடோறும் வலம்வரும் பலன்

ஏற்றுக் கொடியோன் ஆலயத்தில் யாதோர் காலம் வலம்புரிவோர்
மாற்றற் குரியார் எழுபிறப்பின் வதிந்த பாவம் அத்தினத்தில்
போற்றி நாளும் விழவின்வலம் புரிவோர் மேலாம் உருத்திராய்த்
தோற்றித் திகழ்வர் உண்மையெனச் சொல்லும் சுருதி சிவாகமமே.
(37)

## ஏகாங்க நமஸ்காரம் முதலாகிய அஷ்டாங்க நமஸ்காரம்

சிரமே காங்கம் வலக்கரத்தைச் சிரத்தில் குவித்தல் துவிதாங்கம்
சிரமேல் வாம கரத்தினையும் சேர்த்தல் திரிவி தாங்கமதாம்
சிரநீள் கரம்சா னுக்கள்நிலம் தீண்டல் பஞ்சாங் கமதாகும்
சிரமோ வாய்கா துகைசானு செகத்தில் படிதல் அட்டாங்கம். (38)

## நமஸ்காரபலன்

அறைந்த அங்கம் ஐந்துவிதத் தாலும் அநாதி அவற்றினின்றே
துறந்த ஞான வானந்த சோதி பாதம் தொழுதெழுவோர்
சிறந்த உலகின் மேலோர்மெய்ச்சிறப்புற்றிறைஞ்சத் திகழ்ந்துவளம்
நிறைந்த சாலோ காதிபலன் நெறியால் நுகர்ந்து நிலவுவரே. (39)

## சிவாலயத்தை தினமும் மூன்றுவலம் செய்யும் பலன்

பாசப் பகைவன் பசுபதிஎம் பரமன் உறையும் ஆலயத்தில்
நேசத் துடனே சென்றிறைஞ்சி நித்தம் மூன்று வலம்புரிந்து
பேசற் கரியோன் திருமுன்னர்ப் பிறங்க விருந்த பெருந்தவத்தோர்
ஆசற் றிலகு சாமீபம் அடைய ரிதுசத் தியமாமால். (40)

## சிவயோகி தங்குமிடத்தின் பலன்

பாவும் இரவோர் பகல்பன்முற் பாகம் ஒருநாள் இருநாளா
தாவு பெருகும் சிவயோகி தங்கும் தலம்யா தத்தலமே
காவில் தவமும் தருமமுமங் கலங்க ளெவையும் ஆகமமும்
விரவு முயிர்க்காம் புனிதமுமம் மேலோன் பெருமை விளம்பரிதே()

சித்த மலமும் வினையுடலும் தீதென் றருளால் அநாதிமல
முத்தன் அடிக்கீ ழத்துவித முத்தி அடைந்த சிவயோகி
புத்தி யுடன்யா தோரிடத்தில் பொருந்தில் அரைநா ழிகையவணே
பத்தி படச்செய் பாவமெலாம் பரிந்து கெடுதல் நிச்சயமே. (42)

## தீர்த்தத்தின் பலன்

அத்தன் இறைவன் அமலேசன் அமரா லயத்தின் அருகுறுநீர்
சுத்த மசுத்த மாயினுமற் சுரர்கள் பரவு கங்கையென்றே
புத்தி புரிந்தங் கத்தடத்தின் புனலுட் படிவோ ரியாரேனும்
சத்த சனனத் துறுபாவம் தணந்து சிறந்து தயங்குவரே. (43)

## ஆசாரியர் திருவடிதீர்த்தத்தின் பலன்

சித்தும் அசித்தும் சித்தசித்தும் தெளிந்த யோகம் அகம்பிரம
முத்தி யளிக்கும் தேசிகன்றன் முளரிச் சரணக் கிரத்துதித்த

சுத்த தோயம் தனைவாங்கித் தொழுது சிரமேல் தெளித்தோர்தம்
புத்தி யுறுபா வா கிவினை போமக் கணத்தில் திண்ணமதால். (44)

## ஆசாரியர் கொடுக்கும் பரிகலத்தின் பலன்

பாச மகற்றும் தேசிகன்தான் பரிவால் நுகர்ந்து மிகுசேடம்
வீச அன்னோன் நேசமுடன் விதியி னருந்தும் மேலோர்கள்
ஓசை வடிவாம் சண்டேசன் ஒப்புற் றுறைவ ரஃதல்லாற்
பேச அரிய பாதகமும் பிரிப்பர் இவைசத் தியமாமால். (45)

## ஆசாரியர் திருவடிகளை பரிசிக்கும் பலன்

மானம் ஒழுக்கம் தவம்தானம் வனப்போர் நான்கு வருணத்துள்
ஈன மின்றி இரண்டாமாச் சிரமத் திருத்தல் இசைந்துசிவ
ஞான மதின்முப்பொருளுணர்த்தும் நற்றே சிகன்தாள் பரிசித்தோர்
ஊன மான பாவமெலாம் ஒழிவா ரெனநூன் மொழிவாரே. (46)

## சிவலிங்க தரிசனபலன்

தங்கம் கனக மேருவரை தானம் கொடுத்தல் சதகோடி
மங்குல் அளகக் கன்னியரை வளத்தின் அளித்த லொருகோடி
துங்கம் தருகோ டுடைத்தீம்பாற் சுரபி வழங்கல் நூலங்குசிவ
லிங்கந் தனையே தரிசித்தோர்க் கெய்தும் பலத்துக் கிணையாமால். ()

## சிவலிங்கத்தைப் பரிசிக்கும்பலன்

ஈசற் கன்பாய் அவனிலங்கும் இலிங்க மதனைப் பரிசித்தோர்
மோசித் திடுவர் பாவமெலாம் மூல மலமும் முடித்தருளால்
பேசற் கரிய ஆனந்தம் பெறுவார் இறவாப் பிரான்கழற்கீழ்
ஓசைக் குளிகை யுறக்களிம்பற் றுலோகம் பொன்னு முறை
[மைபோல். (48)

## அருச்சனையின் பலன்

நிலத்தில் திகழ்ந்த நறுமலரும் நீருற் பவித்த போதெவையும்
புலத்தின் அமுந்தா அன்பினொடும் போதானந்தன் கழற்கணிந்தோர்

மலத்தி னொகாதி முத்தன்மல வயிரி யுறையுஞ் சிவலோக
தலத்திற் புகுந்து நலத்தகைய தலைவ ராகி நிலவுவரால். (49)

## இந்தப்புட்பம் அர்ச்சனைக்கு ஆகும் என நினைக்கும் பலன்

இறைவ னமலன் தனக்கென்றே யாதோர் தலமுற் றிலகுமிகு
நறைகொள் மலரை அகமலர நயந்து மதிக்கில் எவரேனும்
முறையின் அவர்க்கம் மதிப்பதனல் மூல மலமற் றேகமதா
மறையின் முடிவின் வீட்டின்பம் வழங்கும் வழியின் பொருட்
[டாமால். (50)

## நந்தனவனம் வைக்கும் பலன்

தேவ தேவன் தனக்கன்பால் சிறப்பு மிகுந்த நறுமலர்ப்பூங்
காவை மகிழச் சமைத்தளிக்கும் கருணை யுடையோர் யாவரவர்
பூவின் மடந்தை கனகமிகப் பொருந்தி உலகின் அந்தியத்திற்
பாவி னிலங்கு முருத்திரர்தம் பதம்பெற் றிருப்பர் பணியகன்றே.
(51)

## பசுவிற்குப் புற்கொடுக்கும் பலன்

இரவி எழுமுற் காலத்தின் எழுந்தோர் பிடிபுற் பறித்தன்பால்
பரவி அரிய சுரபிகட்குப் பரிந்து கொடுத்த பெருந்தவத்தோர்
விரவும் வறுமை யாவைகளும் விரவா தொழிந்த வெண்மதியும்
அரவும் அணியும் மணிமுடியோன் அமருஞ் சிவலோ கத்தடைவார்.
(52)

## சிவயோகிக்குப் பிச்சையிடும் பலன்
## கலிவிருத்தம்

விச்சை நான்மறை வேதியர் கோடிபேர்க்
கிச்சை யோடன மீபலம் யாவையும்
நிச்ச யம்மொரு நீள்சிவ யோகிகைப்
பிச்சை யிட்ட பெரும்பயன் நல்குமால். (53)

### பசுவின்பால் அபிஷேக பலன்

*கோவின் பேர்பெறு தீர்த்தங் குறுகியே*
*ஆவி னம்பதி னாயிரம் பன்மறை*
*மேவும் வேதியர்க் கீபலம் வீசுமால்*
*ஆவின் பாலிறைக் காட்டிடு மன்பர்பால்.* (54)

### பஞ்சகௌவிய அபிஷேக பலன்

*கொன்றை வேணிக் குழகனுக் கன்பினால்*
*வென்றி ஆவினைந் தாட்டும் வியப்பினோர்*
*பொன்ற யங்குவி மானம் பொருந்திவான்*
*ஒன்றி வாழ்வர் உருத்திர லோகமே.* (55)

*தூய்ய காபில கௌவியம் சோதிசேர்*
*செய்ய லிங்கந் திகழ்பாணி வட்டமட்*
*டுய்யு மாறுள்ள மாத்திரம் ஆட்டினோர்*
*குய்ய ருத்திர லோகம் குறுகுவார்.* (56)

### ஸ்தபன பலன்

*விதியி னாலிறைக் காட்டல் விரும்பிநீர்*
*வதியு நற்றப னம்பல வைத்துளோர்*
*புதிய போகங்கள் யாவும் பொருந்தியே*
*அதிக ருத்திர லோக மடைவரால்.* (57)

### திருமஞ்சன பலன்

*கந்த மாமலர் நாற்றம் கமழுநீ இச்*
*சிந்தும் வெண்டிரை யாற்றினுட் சீதநீர்*
*பந்த நீங்கும் பசுபதிக் காட்டினோர்*
*வந்து ருத்திர லோகம் வழங்குவார்.* (58)

### சிவார்ப்பிதபலன்

*வருந்தி யாற்றிய வான்தரு போகங்கள்*
*அருந்து முன்னர் அமலற் கறிவொடும்*

பொருந்த நல்கிலப் போகங்கள் யாவையும்
திருந்தி நாளும் சிறப்புற மல்குமால். (59)

## பூசிக்கத்தக்க மூர்த்தங்கள்
## எண்சீர்க்கழிநெடிலடிஆசிரியவிருத்தம்

மானதமண் டலங்கணிகம் பலகைபடம் பித்தி
வரைந்திடுசித் திரமிரதம் வேரமென வகுத்த
தானமிவை யோரெட்டு மொன்றுக்கொன் றதிகம்
தண்படிகம் வாணலிங்கம் சாற்றுமிவற் றதிகம்
ஞானமய லிங்கத்தி லரனைப்பூ சிப்போர்
நற்றீர்த்தம் தானமக மரும்பலங்க ளவையும்
ஈனமுறு பலபாவ மெரித்திடும்புண் ணியமும்
எய்திடுவ ரிவர்க்கொழிவாம் பாவவிதம் மொழிவாம். (60)

## சிவபூசையின் பலன்

செந்தழல்வே தியர்க்கொன்றோர் தேசிகனைப் பிழைத்தோர்
தேனுவினை அறுத்தோர்கள் செய்ந்நன்றி செகுத்தோர்
தந்தைதாய் தனைப்புதல்வன் தனைத்தமையன் தனையும்
தனுவினினின் றுயிரொழித்தோர் தமனியமும் கவர்ந்தோர்
அந்தமின்மித் திரரறவோர் ஆண்மையினிற் சிறந்தோர்
ஆக்கைதடிந் தோர்குரவன் மனையயலார் மனையும்
பந்தமுற அணைந்தோர்மா பாதகத்தோ ரேனும்
பரமனைவந் திக்கிலர்தப் பாவமெலாம் அறுமே. (61)

## ஆலயத்தில் சிவலிங்கப் பெருமானைத் தரிசிக்கும் பலன்

அற்பமகத் தவம்வறியோர் அதிகதன முடையோர்
அளித்தவர்க்குப் பலஞ்சமமா மாதலினால் விதான
கற்புடைய விதியினராய் ஒருபொழுதா லயத்தில்
கண்ணுதல்தன் திருமுன்னர்க் களிப்புடனேத் தினர்தாம்
பொற்புடைய பலபோகம் செல்வங்க ளவையும்
பொருந்தியிக லோகத்திற் போதகமுற் றிருந்தே

*அற்புதமெய் யந்தியத்தி லடைவர்முத்தி யெனவே*
*அநாதிமுத்தன் மலவயிரி அறைந்தனனு கமத்தே.* (29)

## எதி-பிரமசாரி-கிருகஸ்தன்-வானப்பிரஸ்தன் இவர்களுக்குக் கொடுக்கும் தானபலன்

*எதிபிரம சரிகிருகி எழில்வனத்தி லுறைவோன்*
*என்னுமிவர் ஞானியோ கக்கிரியா தியானத்*
*ததிகதவ முடையரிவ ராதலினன் னவர்பால்*
*அருளினவ ரவர்க்கேற்ற தானமளித் திடில்வான்*
*கதிருதய வரவுலகில் இருளகலு மாபோல்*
*கழிந்தகலும் வறுமையெலாம் ஒழிந்திடலன் னவர்க்கே*
*புதியதன தானியம்புத் திரபௌத்தி ராதி*
*புங்கமுறு போகமெல்லாம் தங்கியுறும் தானே.* (63)

## சங்கு-வாத்தியம்-சாமரை-வாள்-கண்ணாடி-குடை வஸ்திரம்-பொன்-தாம்பிரபாத்திரம் இவற்றின் பலன்

*தழங்குசங்கு பல்லியஞ்சா மரைவாள்கண் ணாடி*
*சத்திரம்வத் திரம்கனகம் தாம்பிரபாத் திரமும்*
*முழங்குநதி மதியிதழி முடிக்கணிந்த பெருமான்*
*முன்னருறப் பணிந்தெழுந்து மொழிந்திடுநான் முறையே*
*வழங்குவோர் தமைமுன்னாள் வருத்திடுகல் குரவு*
*மாற்றியக மகிழ்வுறப்பின் மல்குவளம் நுகர்வர்*
*பழங்கணிருள் ஒளியகன்ற வுயிர்க்குயிராய் நிறைந்த*
*பரமசிவ னுருத்திரன்றன் பதிபெறலுண் மையதால்.* (64)

## சிவபெருமானுக்காக மணிகொடுப்போர் அடையும்பலன்

### கலிவிருத்தம்

*ஆறு வேணி அமலற்கு மண்டபத்*
*தேறு மாமணி தூபத் தெறிமணி*

*கூறி ஈந்தவர் கூறரும் செல்வமும்*
*வீறு தேசமும் கீர்த்தியும் மேவுவார்.* (65)

## சிவபெருமானுக்கு ஆதனம்-சயனம்-வாகனம்-சிவிகை கொடுப்போர் அடையும் பலன்

*ஆத னம்சய னம்மணி யானமும்*
*ஏத மில்சிவி கைமுத லின்புற*
*நாத னுக்குக் கொடுத்தநலத்தினல்*
*ஓத லுற்றசா மீப முறுவரால்.* (66)

## நாடகசாலை-திருமதில்-கோபுரம்-மண்டபம் முதலியன சிவபெருமானுக்காகக் கட்டுவிப்போர் அடையும் பலன்

*திருவ ரங்கு திருமதில் கோபுரம்*
*மருவு மண்டபம் வானவற் கன்பொடு*
*கருவ ரம்பறக் கண்டவர் கண்ணுதல்*
*உருவம் நன்குற மேவுவர் உண்மையே.* (67)

## சிவபெருமானுக்குத் திருவாபரணம் தூப தீபங்கள் கொடுக்கும் பலன்

*கலன்க ளாதியும் கற்கா டாதியும்*
*பொலன்கொள் தீபகந் தாதியும் புங்கவற்*
*கிலங்க வேயளித் தோர்நில னின்மிசை*
*நலங்கள் துய்த்தரற் றேவினை நண்ணுவார்.* (68)

## சிவபெருமானுக்குப் பூமி கொடுப்போர் அடையும் பலன்

*வளங்கொ ளோர்பசு வின்னதள் மாத்திரம்*
*விளங்கு பூமி விமலற்கு நல்கினோர்*
*உளங்கொள் தீவினை யாவு மொரீஇயவர்*
*தளங்கொள் தான பலங்களும் தாங்குவார்.* (69)

## விளைநிலமும் சோலையும் சிவபெருமானுக்குக் கொடுக்கும்பலன்

*நீரி ணோங்கி நிறைவிளை பூமியின்*
*காரி ணோங்கு கவின்பொழில் ஞான்மார்*
*சீரி ணோங்கு சிவன்தனக் கீந்திடில்*
*பாரி ணோங்குபல் போகமும் பல்குமால்.* (70)

## சிவவேள்வி செய்யும் பலன்

*தேற்று நூன்முறை யேசிவ யாகம*
*தாற்றி னோர்கள் அமலனுக் கன்பினால்*
*கூற்றின் மூவேழ் குலம்குழித் தீயினின்*
*றேற்றி வான்சிவ லோகத் திருப்பரால்.* (71)

## சிவானந்தமடையும் பலன்

வேறு

*ஞான தேசிகன் நவிற்றிய ஞானயோ கதனால்*
*ஈன மின்றிய பத்தியால் இறையைமுன் னுணர்ந்த*
*மோன ஞானவா னந்தமா மூதுயி ரடைந்தோர்*
*ஊன மாமலக் குரம்பையின் மீண்டிவ ணுதியார்.* (72)

## சிவபெருமானுக்காக வாவி-கூபம்-தடாகம் வகுக்கும் பலன்

*வாவி கூபத டாகங்கள் வகுத்துமேல் தனக்கோர்*
*கோவி லாதபேர்க் குரிசிலைக் குறித்தவை கொடுத்தோர்*
*தாவில் சீர்பெருந் தனத்தொடும் தரணிமேல் தழைத்தே*
*சேவி ணோங்கிய தேவினை அடைவார் தியத்தே.* (73)

## பார்வதியாரை அருச்சிக்கும் பலன்.

*இலைய தத்துவத் திலயியோ டிலயமுற் றிலங்கித்*
*தொலைவில் பேருயிர்க் கருவியாய்த் துரியமேல் நிறைந்த*

தலைவி எம்பெரு மாட்டியைத் தாழ்ந்துநூன் முறையே
நிலையில் நின்றருச் சித்துளோர் நிறைசிவத் துறைவார். (74)

## குரு லிங்க சங்கமத்துக் கெய்தும் இடையூறு அகலும் பொருட்டு உயிர்விடுவோர் அடையும் பலன்.

குருவி லிங்கசங் கமத்தினைக் குறித்தவற் றிடையூ
றொருவு தற்பொருட் டாற்றம துயிர்விடு முரவோர்
மருவி டும்புலம் எமக்குமே வளம்பட வகுப்பான்
அருமை என்றனன் அனைத்தையு முணர்த்துபே ரறிவோன். (75)

குருத்த பத்தியும் இருவித நூன்முறை குறிக்கின்
வருத்த மற்றநற் சுபாவமும் கவுமோய் வழங்கும்
தெரித்த முன்னைய திகபாத் தினிற்சுகம் சேரப்
பொருத்து மற்றது பாத்தினிற் சுகத்தினைப் புணர்க்கும், (76)

## சிவலிங்கமிருக்குமிடமுதல் நூற்றைம்பது முழம் அளவுக்குட்பட்ட பூமியிலிறந்தவர்கள் அடையும் பலன்

துன்று சீர்ச்சிவ லிங்கமுன் றொடுத்துநீள் கரங்கள்
ஒன்று நூற்றைம்ப தாறுமுழ முற்றநாற் றிசையும்
என்று மேற்சிவ லோகமே இவற்றுயிர் துறந்தோர்
சென்று சேர்வர்சா மீப்பியம் என்பது திடனே. (77)

## புறச்சமயத்தார் அடையும் பலன்

பாட்ட மேபிர பாகரம் பௌத்தம்வே தாந்தம்
நாட்டு சாங்கிய மால்வயி ணவமுதற் பசுநூல்
நீட்டு தன்னகப் பொருளினைத் தெளிந்துளோர்க் கின்பம்
கூட்டு மேயிருஞ் சுவர்க்கத்தின் என்று நூல் கூறும். (78)

## ஆகமத்தின் பலன்

ஆதி ஐந்தொழில் ஆற்றிடா தாற்றுவோன் அணுவின்
பேர்த காரிய மறைத்தவா ணத்தினைப் போக்க

ஓது மாகமம் தன்னையுற் றுணர்ந்துளோர் தமக்கே
கோதில் புத்தியும் முத்தியும் கொடுத்திடும் மாதோ. (79)

கற்ற தேசிகன் அருளினுற் சிந்தியா கமத்தைப்
பற்றி ஞலுள முயற்சியால் பணிவொடும் பயின்ரோர்
பெற்ற தோரிந்தப் பிறப்பினில் பெருமலம் நீங்கிச்
சிற்று யிர்க்குயி ராகிய சிவத்திஞென் ருவர். (80)

## இலமான சிவாலயம் மடாலயம் சிவலிங்கம் புட்கரணி முன்போலாகச் செய்விப்பவர்கள் அடையும் பலன்

வேறு

மாதவர் மடங்க ளாதி வரதன்மந் திரங்க ளாதி
நாதமா லிலிங்க மாதி நளினபுட் கரணி யாதி
சேதமுற் றிடின்முன் போலச் செய்கின்ரோர்க் குறும்ப லந்தான்
ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரம் குணித மோங்கும் (81)

## மேற் சொன்னவற்றிற் பழுதான இடங்களைப் பழுதறச்செய்விப்பவர்கள் அடையும் பலன்

உரைத்திடும் மடங்க ளாதி உறுப்பினிற் சிதையின் நூலில்
தெரித்திடு முறையே நன்ருய்த் தெளிவுறச் செய்கின் ரோர்க்கு
வரைத்திடின் முன்னம் செய்தோர் மருவிடும் பலத்தின் மேலாய்
விரித்திடும் பலமும் நூறு மடங்கென இயம்பும் மாதோ. (82)

## சிவயோகியின் பெருமை.

மூந்நூற்சடங்குமுடியாதோன்முடித்தோன்வேதமுழுதுணர்ந்தோன்
தன்னோர் வன்னி கோத்திரியெச் சாவான் சத்திரயாகி
இந்நூற் புகழ்வே தாந்தியிவ ரிசைத்த முறையா யிரமதிகர்
தொன்னூல் வேதச் சிரப்பொருண்முத் தூரிய மகவாக் கியமதனின்.
(83)

மதித்த தத்துவ மசியந்து வயவாக் கியத்தின் வாய்மையினை
விதித்த விஞ்சை யார்கோடி மறையோர் மேலாம் பசுபதிமுன்
கதித்தவோசைச்சிவாகமத்தின்கருத்தும்பொருள்மூன் றுணர்ந்துயிருட்
பதித்த பாம சிவனருளும் பார்க்கும் சிவயோ கிக்கிணையோ. (84)

## ஆசாரியருக்கு அன்னம் அளிப்போர் அடையும் பலன்

### வேறு

வேத கன்குணர் விப்பிரர் கோடிபேர்க்
காதி நான்முறை யாலருந் தும்பலம்
ஓது மோர்குரு வர்க்குறு மோதனம்
காத லாலருந் தும்பலம் காட்டுமால். (85)

## சிவயோகிக்கு அன்னமளிப்போர் அடையும் பலன்

மறைவ லோரிலக் கம்பெயர் மாந்தவே
நிறையி னாலருந் தும்பலம் சேருமால்
உறையும் சாதக யோகி ஒருவனுக்
கறைய நான்முறை அன்னம் அருத்தவே. (86)

## சற்புத்திர மார்க்கத்தார்க்கு அன்னம் அளிப்போர் அடையும் பலன்

ஓது நான்மறை யோரயு தம்பெயர்க்
கீத லால்வரும் புண்ணியம் எய்துமால்
பூத நாதன் பதம்பணி புத்திரர்
ஏத மில்லொரு வர்க்கமு கீதலே. (87)

## சமய தீட்சை பெற்றவர்க்கு அன்னம் அளிப்போர் அடையும் பலன்

ஆற்றும் வேதியர் ஆயிரம் பேர்தமக்
கேற்ற மோடன மீபலம் யாவையும்
சாற்று மோர்சம யிக்குத் தருதியால்
போற்றி வீசிடும் புண்ணியம் நல்குமால் (88)

## சிவநாம கீர்த்தனம் செய்வோர்க்கு அன்னம் அளிப்போ ரடையும் பலன்

*நூறு வேதியர்க் கீபலம் நொய்தென*
*வீறி யோங்கி விளங்குதல் மெய்ம்மையே*
*ஏறு யர்த்தருள் எம்பெரு மான்புகழ்*
*கூறும் பத்தருக் கன்னம் கொடுத்தலே.* (89)

## சாமரம்-தண்டுலம்-தீபம்-வஸ்திரம்-கனி இவை சிவபெருமானுக்கும் ஆசாரியர்க்கும் கொடுக்கும் பலன்

*போற்று சாமரம் தண்டுலம் பூவொளிக்*
*காற்று தீபம் கலைகனி யாதிய*
*சாத்தி யீசற்கு மின்குர வற்குமே*
*ஏற்றி யீந்தவர் தாமுறு புண்ணியம்.* (90)

*ஓது ரோமநற் றண்டுல மோர்மலர்*
*ஆதி யாகிய அவ்வவற் றின்றொகைக்*
*கேத மில்லுக மாயிர மின்பொடும்*
*பூத நாதன் புரத்திற் பொலிவரால்.* (91)

## உத்தியானவனம் வைப்போர் அடையும்பலன்

*உத்தி யான மிறைக்களித் தோரதிற்*
*பத்தி ரம்மலர் பைங்கனி யின்வரை*
*ஒத்த சீருகம் ஒன்றி மகிழ்வொடு*
*நித்த னெங்கும் புரத்தில் நிலவுவார்.* (92)

## சடைமுடிபரிக்கும் சிவபத்தர் அடையும்பலன்

*பத்தர் நூன்முறை வேணி பரித்திடில்*
*ஒத்த வற்றுறு வேணியொவ் வொன்றிற்கு*
*மெத்து மச்சுவ மேத பலத்தினைச்*
*சத்தி யம்மவர் நாடொறும் சார்தலே.* (93)

## மூண்டிதம்—சிகையுடைய சிவபத்தர் அடையும்பலன்

*அண்ட வாணனுக் கன்பொடு மூண்டிதம்*
*கொண்ட நீள்சிகை யாயினும் கொண்டுளோர்*
*பண்ட ருக்கா மேத பலத்தினேர்*
*எண்டிகழ்ந்த தினந்தொறும் எய்துவார்.* (94)

## சிவபத்தருக்குச்சிவலிங்கம் கொடுப்போர் அடையும்பலன்

*ஈச னன்பர்க் கிலிங்க மளிக்கிலத்*
*தேச வேதித் திலத்தொகைக் காயிரம்*
*பேசு திவ்விய கற்பம் பிராதுறை*
*வாச மார்சிவ லோக மருவுவார்.* (95)

## சிவாலயத்திலும் ஆசாரியர் இருக்குமிடத்திலும் ஒருநாள் திருவலகிடுவோர் அடையும் பலன்

*அண்ணல் தன்பொருட் டாசிரி யன்பொருட்*
*டெண்ணி யேஅல கிட்டுழி ஓர்தினம்*
*கண்ணின் மேவரு சென்துக் கழியினும்*
*நண்ணு வார்சாந்தி ராயண நற்பலம்.* (96)

## ஒருபட்சம் திருவலகிடுவோர் அடையும் பலன்

*மிக்க விந்த விதியிடை யின்றியே*
*பக்க மொன்றல கிட்டவர் பல்வளம்*
*தொக்க ருத்திர லோகம் தொகுவரால்*
*தக்க திவ்விய கோடி சதயுகம்.* (97)

## சிவபெருமானுக்காக நீராஞ்சனம் ஏந்துவோர் அடையும் பலன்

*அண்ண லுக்கபி டேகம தாதியில்*
*எண்ணின் மிக்கநீ ராஞ்சன மேந்தினோர்*

விண்ண ருக்கரோர் கோடியர் மெய்யராய்ப்
பண்ணின் மிக்க பரன்பதி பற்றுவார். (98)

## தயிர் அபிஷேக பலன்

வண்டு கிண்டித ழித்தொடை வார்சடை
அண்ட நாயகற் கன்பொடு வெண்டயிர்
தொண்டி ஞேடும் தொழுதுவந் தாட்டிஞேர்
விண்டு வின்பதி மேவுவர் மெய்ம்மையே. (99)

## பசுவின்நெய் அபிஷேக பலன்

ஆய கற்பமோ ராயிர கோடியும்
ஒய்வ தின்றி உஞற்றிய பாவங்கள்
தேயு நற்சிவ லிங்கத்திற் சீர்பெறத்
தூய நெய்முழுத லாட்டிடும் தூயர்க்கே. (100)

## தேன் அபிஷேகம் ஞாஞக்கினியிற் பூசைசெய்யும் பலன்

தேனு வந்து சிவலிங்கத் தாட்டிஞேர்
ஊனு வந்தபல் பாவமொ ழிப்பரால்
ஞான வங்கியிற் பூசை நயந்திடின்
மான வங்கி பதத்தினில் வாழ்வரே. (I01)

## கரும்புரச அபிஷேக பலன்

இக்கி ஞூறுய் இரதம் இனிமையால்
செக்கர் மேனிச் சிவலிங்கத் தாட்டிஞேர்
தக்கன் ஆற்று மகந்தடிந் தெய்மையாள்
மிக்க வீர தரன்பதி மேவுவார். (102)

## எண்ணெய்-இளநீர் அபிஷேக பலன்

சங்க நற்கெட் டயிலமெய்ச் சாத்திடில்
பொங்கு வாயுவின் பொன்னகர் சேர்குவார்

*தூங்க நீர்க்கனி யாட்டில் தூரிசுபோய்த்*
*தங்கு வார்பிதிர் தங்கிய தானமே.* (103)

## விபூதி அபிஷேக பலன்

*வேத நீற்றை விமலனுக் காட்டினோர்*
*ஓதும் ஆச்சிவன் போன்றங் கொழிவின்றி*
*மூதெ யிற்சிவ லோக முதற்பதி*
*போத முற்றவர் போற்றப் பொலிவரே.* (104)

## சிவபெருமானுக்கும் ஆசாரியருக்கும் பொன்னும் மணியும் கொடுப்போரடையும் பலன்

*நம்ப னுக்குமநற் றேசிகற் கும்பசும்*
*செம்பொ னோர்துடி மாத்திரம் செய்தவர்*
*உம்பர் கோன்பதி ஒன்றுவர் மாமணி*
*இம்பர் வீசின் அயன்பத மெய்துவார்.* (105)

## சிவபெருமானுக்குத் தூபமிடுவோரடையும் பலன்

*தேவ தாருவும் மேருவும் சீர்மிக*
*மேவு குந்துரு வும்வில்வ மாதிய*
*தாவில் நற்கனி நெய்யொடு தங்கிய*
*தூவ மிட்டவர் அச்சுத னவரே.* (106)

*விதியி வற்றினற் கந்தம் விரவிடின்*
*அதிக மாறு யிரங்குண மாமிவை*
*பதிய குக்குலு வோடு பொருந்திடில்*
*வதியு மாறு யிரங்குணம் வாய்க்கவே.* (107)

*அன்ன வைகிரு தத்துறின் ஆயிரம்*
*துன்னு மிக்குணத் தின்மயி டாக்கியென்*
*றுன்னு நற்பொருள் கூடி னுருத்திரன்*
*தன்னை யொத்த பலன்தரும் தன்மையார்.* (108)

காரின் மிக்க பொதியத்திற் காரகில்
சீரின் மிக்கவித் தூபம் செறித்திடில்
பாரின் மிக்குப் பயின்றபல் பாவமும்
வேரி னற்று விளிந்திடல் மெய்ம்மையே. (109)

## சிவலிங்கப்பெருமானுக்குப் பச்சைக்கருப்பூரக் கலவைசாத்துவோ ரடையும் பலன்

சுகந்த கந்தம் சுலவிய லேபனம்
உகந்த லிங்கத் தொருதினம் சாத்தினோர்
இகந்து பாவம் இமையவர் கோடியாண்
டகந் தெளிந்தங் கரன்பதி நண்ணுவார். (110)

## சிவபெருமானுக்காகப் பேரிமுதலியவாத்தியங்கள் கொடுப்போரடையும் பலன்

பொங்கு பேரி பொருமுர சம்மிரு
தங்க மோடு திமில்பட காளியும்
சங்கு தாளம் தனுமிகு காகளம்
விங்கு சீரொலி யேணுவும் வீணையும். (111)

சொன்ன இன்னவை சோதி நிலாவணி
மன்ன வற்கு வழங்கிய மாதவர்
அன்ன வன்றனை யொத்த யுகந்தரும்
மின்னு கற்பம் அவன்பதி தோய்வரால். (112)

## சிவாலயத்திலும் மடாலயத்திலும் நவமணி மாலிகையாற் பத்திசெய்தவர் அடையும்பலன்

நித்தி லம்முதல் நீள்மணி மாலிகை
அத்தன் ஆலயத் தன்பர் மடத்திலும்
பத்தி செய்தவர் பற்பல லோகமும்
அத்தர் போல்நெடுங் காலம் அமர்வரால். (113)

### சிவபெருமான் சந்நிதியில் துதிசெய்வோரும் கீதம்பாடுவோரும் அடையும்பலன்

*துதியும் கீதமும் சோதிமுன் பத்தியால்*
*கெதியி னோதிடக் கேட்டவர் தாவரம்*
*மதியில் கீடம் கிருமிவ ரன்பதி*
*வதியும் ஓதினர்க் கென்கொல் வகுப்பதே.* (114)

### சிவபெருமானுக்கு வில்வக் குழம்பு அபிஷேகம் செய்யும் பலன்

*மாசில் கூவிள பத்திர மத்தனம்*
*தேசு லாம்பீட லிங்கம திற்செயின்*
*ஓசை நான்மறை யோர்க்கயு தம்பசுப்*
*பேசி ஈந்த பெரும்பயன் பெற்றுளார்.* (115)

### சிவபெருமான் சந்நிதியில் யாவர் நடனம் செய்யினும் அடையும் பலன்

*நிருத்தம் எந்தைமுன் யாவர்நி கழ்த்தினும்*
*விரித்த பானு வயுதம் விரிகதிர்*
*பொருத்து தேரிற் புலவர் அரம்பையர்*
*கருத்தின் நாடகம் காண்பர் சிவபுரி.* (116)

### சிவாகம தானம்செய்வோர் அடையும் பலன்

*நிறைந்த ஆகம தானம் நிகழ்த்திடில்*
*அறிந்து மற்றறி யாமையோ டாயினும்*
*சிறந்த பாலன் முதற்கொலை தீர்ந்துதோ*
*உறைந்து நற்சிவ லோகம் புகுவரே.* (117)

### சிவனடியார்க்கு ஆசனம் கொடுப்போர் அடையும்பலன்

*மூண்ட கக்கண் முராரியும் போற்றிடும்*
*அண்டர் கோனன்பர்க் காசனம் ஈந்துளோர்*

அற்புதமெய் யந்தியத்தி லடைவர்முத்தி யெனவே
அநாதிமுத்தன் மலவயிரி அறைந்தனனு கமத்தே. (29)

## எதி-பிரமசாரி-கிருகஸ்தன்-வானப்பிரஸ்தன் இவர்களுக்குக் கொடுக்கும் தானபலன்

எதிபிரம சரிகிருகி எழில்வனத்தி லுறைவோன்
என்னுமிவர் ஞானியோ கக்கிரியா தியானத்
ததிகதவ முடையரிவ ராதலினன் னவர்பால்
அருளினவ ரவர்க்கேற்ற தானமளித் திடில்வான்
கதிருதய வரவுலகில் இருளகலு மாபோல்
கழிந்தகலும் வறுமையெலாம் ஒழிந்திடிலன் னவர்க்கே
புதியதன தானியம்புத் திரபௌத்தி ராதி
புங்கமுறு போகமெல்லாம் தங்கியுறும் தானே. (63)

## சங்கு-வாத்தியம்-சாமரை-வாள்-கண்ணாடி-குடை வஸ்திரம்-பொன்-தாம்பிரபாத்திரம் இவற்றின் பலன்

தழங்குசங்கு பல்லியஞ்சா மரைவாள்கண் ணாடி
சத்திரம்வத் திரம்கனகம் தாம்பிரபாத் திரமும்
முழங்குநதி மதியிதழி முடிக்கணிந்த பெருமான்
முன்னருறப் பணிந்தெழுந்து மொழிந்திடுநான் முறையே
வழங்குவோர் தமைமுன்னுள் வருத்திடுகல் குரவு
மாற்றியக மகிழ்வுறப்பின் மல்குவளம் நுகர்வர்
பழங்கணிருள் ஒளியகன்ற வுயிர்க்குயிராய் நிறைந்த
பரமசிவ னுருத்திரன்றன் பதிபெறலுண் மையதால். (64)

## சிவபெருமானுக்காக மணிகொடுப்போர் அடையும்பலன்

### கலிவிருத்தம்

ஆறு வேணி அமலற்கு மண்டபத்
தேறு மாமணி தூபத் தெறிமணி

கூறி ஈந்தவர் கூறரும் செல்வமும்
வீறு தேசமும் கீர்த்தியும் மேவுவார். (65)

## சிவபெருமானுக்கு ஆதனம்-சயனம்-வாகனம்-சிவிகை கொடுப்போர் அடையும் பலன்

ஆத னம்சய னம்மணி யானமும்
ஏத மில்சிவி கைமுத லின்புற
நாத னுக்குக் கொடுத்தகலத்தினால்
ஓத னுற்றசா மீப முறுவரால். (66)

## நாடகசாலை-திருமதில்-கோபுரம்-மண்டபம் முதலியன சிவபெருமானுக்காகக் கட்டுவிப்போர் அடையும் பலன்

திருவ ரங்கு திருமதில் கோபுரம்
மருவு மண்டபம் வானவற் கன்பொடு
கருவ ரம்பறக் கண்டவர் கண்ணுதல்
உருவம் நன்குற மேவுவர் உண்மையே. (67)

## சிவபெருமானுக்குத் திருவாபரணம் தூப தீபங்கள் கொடுக்கும் பலன்

கலன்க ளாதியும் கற்கா டாதியும்
பொலன்கொள் தீபகந் தாதியும் புங்கவற்
கிலங்க வேயளித் தோர்பல ளின்மைசை
கலங்கள் தாய்த்தநற் றேவினை நண்ணுவார். (68)

## சிவபெருமானுக்குப் பூமி கொடுப்போர் அடையும் பலன்

வளங்கொ ளோர்பசு வின்னதன் மாத்திரம்
விளங்கு பூமி விமலற்கு நல்கினோர்
உளங்கொள் தீவினை யாவு மொரீஇயவர்
தளங்கொள் தான பலங்களும் தாங்குவார். (69)

## விளைநிலமும் சோலையும் சிவபெருமானுக்குக் கொடுக்கும்பலன்

*நீரி ளோங்கி நிறைவிளை பூமிவிண்*
*காரி னோங்கு கவின்பொழில் ஞானமார்*
*சீரி னோங்கு சிவன்தனக் கீந்திடில்*
*பாரி னோங்குபல் போகமும் பல்குமால்.* (70)

## சிவவேள்வி செய்யும் பலன்

*தேற்று நான்முறை யேசிவ யாகம*
*தாற்றி னோர்கள் அமலனுக் கன்பினால்*
*கூற்றின் மூவேழ் குலம்குழித் தீயினின்*
*றேற்றி வான்சிவ லோகத் திருப்பரால்.* (71)

## சிவானந்தமடையும் பலன்
### வேறு

*ஞான தேசிகன் நவிற்றிய ஞானயோ கதனால்*
*ஈன மின்றிய பத்தியால் இறையைமுன் னுணர்ந்த*
*மோன ஞானவா நந்தமா மூதுயி ரடைந்தோர்*
*ஊன மாமலக் குரம்பையின் மீண்டிவ ணுறியார்.* (72)

## சிவபெருமானுக்காக வாவி-கூபம்-தடாகம் வகுக்கும் பலன்

*வாவி கூபத டாகங்கள் வகுத்துமேல் தனக்கோர்*
*கோவி லாதபேர்க் குரிசிலைக் குறித்தவை கொடுத்தோர்*
*தாவில் சீர்பெருந் தனத்தொடும் தரணிமேல் தழைத்தே*
*சேவி னோங்கிய தேவினை அடைவரந் தியத்தே.* (73)

## பார்வதியாரை அருச்சிக்கும் பலன்.

*இலைய தத்துவத் திலயியோ டிலயமுற் றிலங்கித்*
*தொலைவில் பேருயிர்க் கருவியாய்த் துரியமேல் நிறைந்த*

தலைவி எம்பெரு மாட்டியைத் தாழ்ந்து நான் முறையே
நிலையில் நின்றருச் சித்துளோர் நிறைசிவத் துறைவார். (74)

## குரு லிங்க சங்கமத்துக்கெய்தும் இடையூறு அகலும் பொருட்டு உயிர்விடுவோர் அடையும் பலன்.

குருவி லிங்கசங் கமத்தினைக் குறித்தவற் றிடையூ
றொருவு தற்பொருட் டாற்றம துயிர்விடு மூரவோர்
மருவி டும்பலம் எமக்குமே வளம்பட வகுப்பான்
அருமை என்றனன் அனைத்தையு முணர்த்துபே ரறிவோன்.
(75)

குருத்த பத்தியும் இருவித நான்முறை குறிக்கின்
வருத்த மற்றநற் சுபாவமும் கவுணமாய் வழங்கும்
தெரித்த முன்னைய திகபரத் தினிற்சுகம் சேரப்
பொருத்து மற்றது பரத்தினிற் சுகத்தினைப் புணர்க்கும். (76)

## சிவலிங்கமிருக்குமிடமுதல் நூற்றைம்பது முழம் அளவுக் குட்பட்ட பூமியிலிறந்தவர்கள் அடையும் பலன்

துன்று சீர்ச்சிவ லிங்கமுன் றெடுத்துநீள் கரங்கள்
ஒன்று நூற்றைம்ப துறுமுழ முற்றநாற் றிசையும்
என்று மேற்சிவ லோகமே இவற்றுயிர் துறந்தோர்
சென்று சேர்வர்சா மீப்பியம் என்பது திடனே. (77)

## புறச்சமயத்தார் அடையும் பலன்

பாட்ட மேபிர பாகரம் பௌத்தம்வே தாந்தம்
நாட்டு சாங்கிய மால்வயி ணவமுதற் பசுநூல்
நீட்டு தன்னகப் பொருளினைத் தெளிந்துளோர்க் கின்பம்
கூட்டு மேயிருஞ் சுவர்க்கத்தின் என்று நூல் கூறும். (78)

## ஆகமத்தின் பலன்

ஆதி ஐந்தொழில் ஆற்றிடா தாற்றுவோன் அணுவின்
போத காரிய மறைத்தவா ணத்தினைப் போக்க

ஓது மாகமம் தன்னையுற் றுணர்ந்துளோர் தமக்கே
கோதில் புத்தியும் முத்தியும் கொடுத்திடும் மாதோ. (79)

கற்ற தேசிகன் அருளினாற் சிந்தியா கமத்தைப்
பற்றி னூலுள முயற்சியால் பணியொடும் பயின்றோர்
பெற்ற தோரிந்தப் பிறப்பினில் பெருமலம் நீங்கிச்
சிற்று யிர்க்குயி ராகிய சிவத்தினொன் றுவர். (80)

## சிலமான சிவாலயம் மடாலயம் சிவலிங்கம் புட்கரணி முன்போலாகச் செய்விப்பவர்கள் அடையும் பலன்

### வேறு

மா தவர் மடங்க ளாதி வரதன்மந் திரங்க ளாதி
நாதமா லிலிங்க மாதி நளினபுட் கரணி யாதி
சேதமுற் றிடின்முன் போலச் செய்கின்றோர்க் குறும்ப லந்தான்
ஓதுமுன் செய்தோர் தம்மில் ஆயிரம் குணித மோங்கும் (81)

## மேற் சொன்னவற்றிற் பழுதான இடங்களைப் பழுதறச்செய்விப்பவர்கள் அடையும் பலன்

உரைத்திடும் மடங்க ளாதி உறுப்பினிற் சிதையின் நூலில்
தெரித்திடு முறையே நன்றாய்த் தெளிவுறச் செய்கின் றோர்க்கு
வரைத்திடின் முன்னம் செய்தோர் மருவிடும் பலத்தின் மேலாய்
விரித்திடும் பலமும் நூறு மடங்கென இயம்பும் மாதோ. (82)

## சிவயோகியின் பெருமை.

மூன்றூற்சடங்குமுடியாதோன்முடித்தோன்வேதமுழுதுணர்ந்தோன்
தன்னோர் வன்னி கோத்திரியெச் சாவான் சத்திரயாகி
இந்நூற் புகழ்வே தாந்தியிவ ரிவைசத்த முறையா யிரமதிகர்
தொன்னூல் வேதச் சிரப்பொருண்முத் தரிய மகவாக் கியமதனின்.
(83)

*மதித்த தத்துவ மசியந்து வயவாக் கியத்தின் வாய்மையினை*
*விதித்த விஞ்சை யார்கோடி மறையோர் மேலாம் பசுபதிமுன்*
*கதித்தவோசைச்சிவாகமத்தின்கருத்தும்பொருள்மூன் றுணர்ந்துயிருட்*
*பதித்த பரம சிவனருளும் பார்க்கும் சிவயோ கிக்கிணையோ.* (84)

## ஆசாரியருக்கு அன்னம் அளிப்போர் அடையும் பலன்

### வேறு

*வேத கன்குணர் விப்பிரர் கோடிபேர்க்*
*காதி நான்மறை யாலருந் தும்பலம்*
*ஓது மோர்குரு வற்குறு மோதனம்*
*காத லாலருந் தும்பலம் காட்டுமால்.* (85)

## சிவயோகிக்கு அன்னமளிப்போர் அடையும் பலன்

*மறைவ லோரிலக் கம்பெயர் மாந்தவே*
*நிறையி னுலருந் தும்பலம் சேருமால்*
*உறையும் சாதக யோகி ஒருவனுக்*
*கறையு நான்மறை அன்னம் அருத்தவே.* (86)

## சற்புத்திர மார்க்கத்தார்க்கு அன்னம் அளிப்போர் அடையும் பலன்

*ஓது நான்மறை யோரயு தம்பெயர்க்*
*கீத லால்வரும் புண்ணியம் எய்துமால்*
*பூத நாதன் பதம்பணி புத்திரர்*
*ஏத மில்லொரு வர்க்கமு தீதலே.* (87)

## சமய தீட்சை பெற்றவர்க்கு அன்னம் அளிப்போர் அடையும் பலன்

*ஆற்றும் வேதியர் ஆயிரம் பேர்தமக்*
*கேற்ற மோடன மீபலம் யாவையும்*
*சாற்று மோர்சம யிக்குத் தருதியால்*
*போற்றி வீசிடும் புண்ணியம் நல்குமால்.* (88)

## சிவநாம கீர்த்தனம் செய்வோர்க்கு அன்னம் அளிப்போ ரடையும் பலன்

*நூறு வேதியர்க் கீபலம் நொய்தென*
*வீறி யோங்கி விளங்குதல் மெய்ம்மையே*
*ஏறு யர்த்தருள் எம்பெரு மான்புகழ்*
*கூறும் பத்தருக் கன்னம் கொடுத்தலே.* (89)

## சாமரம்-தண்டுலம்-தீபம்-வஸ்திரம்-கனி இவை சிவபெருமானுக்கும் ஆசாரியர்க்கும் கொடுக்கும் பலன்

*போற்று சாமரம் தண்டுலம் பூவொளிக்*
*காற்று தீபம் கலைகனி யாதிய*
*சாத்தி யீசற்கு மின்குர வற்குமே*
*ஏற்றி யீந்தவர் தாமுறு புண்ணியம்.* (90)

*ஓது ரோமநற் றண்டுல மோர்மலர்*
*ஆதி யாகிய அவ்வவற் றின்றொகைக்*
*கேத மில்லுக மாயிர மின்பொடும்*
*பூத நாதன் புரத்திற் பொலிவரால்.* (91)

## உத்தியானவனம் வைப்போர் அடையும்பலன்

*உத்தி யான மிறைக்களித் தோரதிற்*
*பத்தி ரம்மலர் பைங்கனி யின்வரை*
*ஒத்த சீருகம் ஒன்றி மகிழ்வொடு*
*நித்த னேங்கும் புரத்தில் நிலவுவார்.* (92)

## சடைமுடிபரிக்கும் சிவபத்தர் அடையும்பலன்

*பத்தர் நான்முறை வேணி பரித்திடில்*
*ஒத்த வற்றுறு வேணியொவ் வொன்றிற்கு*
*மெத்து மச்சுவ மேத பலத்தினைச்*
*சத்தி யம்மவர் நாடொறும் சார்தலே.* (93)

## ஏண்டிதம்—சிகையுடைய சிவபத்தர் அடையும்பலன்

*அண்ட வாணனுக் கன்பொடு மூண்டிதம்*
*கொண்ட நீள்சிகை யாயினும் கொண்டுளோர்*
*பண்ட ருந்கர மேத பலத்தினோர்*
*எண்டி கழ்ந்த தினந்தொறும் எய்துவார்.* (94)

## சிவபத்தருக்குச்சிவலிங்கம் கொடுப்போர் அடையும்பலன்

*ஈச னன்பர்க் கிலிங்க மளிக்கிலத்*
*தேசு வேதித் திலத்தொகைக் காயிரம்*
*பேசு திவ்விய கற்பம் பிரானுறை*
*வாச மார்சிவ லோக மருவுவார்.* (95)

## சிவாலயத்திலும் ஆசாரியர் இருக்குமிடத்திலும் ஒருநாள் திருவலகிடுவோர் அடையும் பலன்

*அண்ணல் தன்பொருட் டாசிரி யன்பொருட்*
*டெண்ணி யேஅல கிட்டுழி ஓர்தினம்*
*கண்ணின் மேவரு செந்துக் கழியினும்*
*நண்ணு வார்சாந்தி ராயண நற்பலம்.* (96)

## ஒருபட்சம் திருவலகிடுவோர் அடையும் பலன்

*மிக்க விந்த விதியிடை யின்றியே*
*பக்க மொன்றல கிட்டவர் பல்வளம்*
*தொக்க ருத்திர லோகம் தொகுவரால்*
*தக்க திவ்விய கோடி சதயுகம்.* (97)

## சிவபெருமானுக்காக நீராஞ்சனம் ஏந்துவோர் அடையும் பலன்

*அண்ண லுக்கபி டேகம தாதியில்*
*எண்ணின் மிக்கநீ ராஞ்சன மேந்தினோர்*

விண்ண ருக்கரோர் கோடியர் மெய்யாராய்ப்
பண்ணின் மிக்க பரன்பதி பற்றுவார். (98)

## தயிர் அபிஷேக பலன்

வண்டு கிண்டித ழித்தொடை வார்சடை
அண்ட நாயகற் கன்பொடு வெண்டயிர்
தொண்டி னோடும் தொழுதுவந் தாட்டினோர்
விண்டு வின்பதி மேவுவர் மெய்ம்மையே. (99)

## பசுவின்நெய் அபிஷேக பலன்

ஆய கற்பமோ ராயிர கோடியும்
ஓய்வ தின்றி உஞற்றிய பாவங்கள்
தேயு நற்சிவ லிங்கத்திற் சீர்பெறத்
தூய நெய்முத லாட்டிடும் தூயர்க்கே. (100)

## தேன் அபிஷேகம் ஞானக்கினியிற் பூசைசெய்யும் பலன்

தேனு வந்து சிவலிங்கத் தாட்டினோர்
ஊனு வந்துபல் பாவமொ ழிப்பரால்
ஞான வங்கியிற் பூசை நயந்திடின்
மான வங்கி பதத்தினில் வாழ்வரே. (I01)

## கரும்புரச அபிஷேக பலன்

இக்கி னூறும் இரதம் இனிமையால்
செக்கர் மேனிச் சிவலிங்கத் தாட்டினோர்
தக்கன் ஆற்று மகந்தடிந் தெய்மையாள்
மிக்க வீர தரன்பதி மேவுவார். (102)

## எண்ணெய்-இள்நீர் அபிஷேக பலன்

சங்க ரற்கெட் டயிலமெய்ச் சாத்திடில்
பொங்கு வாயுவின் பொன்னகர் சேர்குவார்

தூங்க நீர்க்கனி யாட்டில் தரிசபோய்த்
தங்கு வார்பிதிர் தங்கிய தானமே. (103)

## விபூதி அபிஷேக பலன்

வேத நீற்றை விமலனுக் காட்டினோர்
ஓதும் ஆச்சிவன் போன்றங் கொழிவின்றி
மூதெ யிற்சிவ லோக முதற்பதி
போத முற்றவர் போற்றப் பொலிவரே. (104)

## சிவபெருமானுக்கும் ஆசாரியருக்கும் பொன்னும் மணியும் கொடுப்போரடையும் பலன்

நம்ப னுக்குநற் றேசிகற் கும்பசும்
செம்பொ னோர்குடி மாத்திரம் செய்தவர்
உம்பர் கோன்பதி யொன்றுவர் மாமணி
இம்பர் வீசின் அயன்பத மெய்துவார். (105)

## சிவபெருமானுக்குத் தூபமிடுவோரடையும் பலன்

தேவ தாருவும் மேருவும் சீர்மிக
மேவு குந்துரு வும்வில்வ மாதிய
தாவில் நற்கனி நெய்யொடு தங்கிய
தூவ மிட்டவர் அச்சுத னவரே. (106)

விதியி வற்றினற் கந்தம் விரவிடின்
அதிக மாறு யிரங்குண மாமிவை
பதிய குக்குலு வோடு பொருந்திடில்
வதியு மாறு யிரங்குணம் வாய்க்கவே. (107)

அன்ன வைகிரு தத்துறின் ஆயிரம்
துன்னு மிக்குணத் தின்மயி டாக்கியென்
றுன்னு நற்பொருள் கூடி னுருத்திரன்
தன்னை யொத்த பலன்தரும் தன்மையார். (108)

*காரின் மிக்க பொதியத்திற் காரகில்*
*சீரின் மிக்கவித் தூபம் செறித்திடில்*
*பாரின் மிக்குப் பயின்றபல் பாவமும்*
*வேரி னற்று விளிந்திடல் மெய்ம்மையே.* (109)

## சிவலிங்கப்பெருமானுக்குப் பச்சைக்கருப்பூரக் கலவைசாத்துவோ ரடையும் பலன்

*சுகந்த கந்தம் சுலவிய லேபனம்*
*உகந்த லிங்கத் தொருதினம் சாத்தினோர்*
*இகந்து பாவம் இமையவர் கோடியாண்*
*டகந் தெளிந்தங் கரன்பதி நண்ணுவார்.* (110)

## சிவபெருமானுக்காகப் பேரிமுதலியவாத்தியங்கள் கொடுப்போரடையும் பலன்

*பொங்கு பேரி பொருமுர சம்மிரு*
*தங்க மோடு திமில்பட காதியும்*
*சங்கு தாளம் தனுமிகு காகளம்*
*விங்கு சீரொலி வேணுவும் வீணையும்.* (111)

*சொன்ன இன்னவை சோதி நிலாவணி*
*மன்ன வற்கு வழங்கிய மாதவர்*
*அன்ன வன்றனை யொத்த யுதந்தரும்*
*துன்னு கற்பம் அவன்பதி தோய்வரால்.* (112)

## சிவாலயத்திலும் மடாலயத்திலும் நவமணி மாலிகையாற் பத்திசெய்தவர் அடையும்பலன்

*நித்தி லம்முதல் நீள்மணி மாலிகை*
*அத்தன் ஆலயத் தன்பர் மடத்தினும்*
*பத்தி செய்தவர் பற்பல லோகமும்*
*அத்தர் போல்நெடுங் காலம் அமர்வரால்.* (113)

### சிவபெருமான் சந்நிதியில் துதிசெய்வோரும் இதம்பாடுவோரும் அடையும்பலன்

துதியும் கீதமும் சோதிமுன் பத்தியால்
நெறியி னோதிடக் கேட்டவர் தாவரம்
மதியில் கீடம் இருமிய ரன்பதி
வதியும் ஓதினோர்க் கென்கொல் வருப்பதே. (114)

### சிவபெருமானுக்கு வில்வக் குழம்பு அபிஷேகம் செய்யும் பலன்

மாசில் கூவிள பத்திர மத்தனம்
தேசு லாம்பீட லிங்கமி தற்செயின்
ஓசை நான்மறை யோர்க்கயு தம்பசுப்
பேசி ஈந்த பெரும்பயன் பெற்றுளார். (115)

### சிவபெருமான் சந்நிதியில் யாவர் நடனம் செய்யினும் அடையும் பலன்

நிருத்தம் எந்தைமுன் யாவர்நி கழ்த்தினும்
விரித்த பானு வயுதம் விரிகதிர்
பொருத்து தேரிற் புலவர் அரம்பையர்
கருத்தின் நாடகம் காண்பர் சிவபுரி. (116)

### சிவாகம தானம்செய்வோர் அடையும் பலன்

நிறைந்த ஆகம தானம் நிகழ்த்திடில்
அறிந்து மற்றறி யாமையோ டாயினும்
சிறந்த பாலன் முதற்கொலை தீர்ந்துதா
உறைந்து நற்சிவ லோகம் புகுவரே. (117)

### சிவனடியார்க்கு ஆசனம் கொடுப்போர் அடையும்பலன்

முண்ட கக்கண் முராரியும் போற்றிடும்
அண்டர் கோனன்பர்க் காசனம் ஈந்துளோர்

எண்டி கழ்ந்த இருபதி னாயிரம்
கொண்ட ஆண்டும் அரிபதம் கூடுவார். (118)

### சிவனடியாரைத் தரிசிப்போரடையும் பலன்

கங்கை வேணியன் தொண்டரைக் காணுறில்
கங்கை யாடும் பலன்தரும் கால்தொழு
தங்கை நீரின் அவர்தாள் விளக்கினோர்
அங்கி சேர்பதி தங்குவர் ஐந்துகம். (119)

### சிவனடியாருக்கு முகவாசம்கொடுப்போரடையும் பலன்

கான மார்முக வாசம் கனிவொடும்
ஊன மில்சிவ பத்தர்க் குதவினோர்
ஆன கோடி யுகமா யிரந்தழீஇ
ஞான வேற்கும ரன்பதி நண்ணுவார். (120)

### சிவனடியாருக்கு ஆசமனம் அருக்கியம் கொடுப்போர் அடையும் பலன்

அன்ப ருக்கா சமன மருக்கியம்
இன்ப ருக்காதி யல்வழி ஈந்துளோர்
துன்ப ருக்கிகி லத்தில் துலங்கியே
பின்ப ருக்கன் பெரும்பதி நண்ணுவார். (121)

### சிவபெருமானுக்குக் கருப்பூரதீபம் கொடுப்போர் அடையும் பலன்

பொற்பு றச்சிவ புண்ணிய மேவிடக்
கர்ப்பு ரச்சுடர்த் தீபம் அளித்துளோர்
தற்ப ரச்சிவ சாமர தந்தரும்
சிற்ப ரச்சிவ ஞானம் தெளிகுவார். (122)

### சிவனடியாருக்கு விசிறிகொடுப்போரடையும் பலன்

ஈற்று வெண்மதி யோன்தொண்டர்க் கின்புறச்
சாற்றித் தால விருத்தம் தழீஇயதோர்

*காற்றி ளுலவர் காயத்தின் வேர்வினை*
*மாற்று வார்வாயு வின்புரம் மன்னுவார்.* (123)

## சிவனடியாரை ஸ்நானம்செய்விப்போரடையும் பலன்

*மூத்தன் வேத முதல்வன் சிவனவன்*
*பத்தர் பாதம் பணிந்தவர்க் கன்பினால்*
*சுத்த ஙானம்செய் வித்திடும் தூயவர்*
*புத்தி யாற்செய்த பாவங்கள் பொன்றுமே.* (124)

## சிவனடியாருக்குக் கோவணம் கொடுப்போரடையும் பலன்

*நாற்ற மாமல ரோனெழில் நாரணன்*
*போற்று சங்கர னன்பர்க்குப் பொங்கிழை*
*ஆற்று கோவணம் ஈந்தவர் ஆயிரம்*
*தேற்று கோடி யுகஞ்சிவ லோகரே.* (125)

## சிவனடியாருக்குக் கம்பளம்கொடுப்போர் அடையும் பலன்

*நீடு நற்சிவ பத்தர்க்கு நேசத்தால்*
*மூடு கம்பளம் ஈந்திடின் முன்னதின்*
*ஊடு ரோமமோ ரொன்றினுக்கு ழுகரோஞ்*
*சாட கந்தரும் அப்பலம் நேருமால்.* (126)

## சிவனடியாருக்குப் புலித்தோல் மான்தோல் கொடுப்போரடையும் பலன்

*வழுவை யின்உரி வானவ னன்பருக்*
*குழுவை யின்உரி யாதி உதவினோர்*
*தழுவு கம்பளத் திற்குமுன் சாற்றிய*
*விழுமி தாய பலத்தினை மேவுவார்.* (127)

## சிவனடியாருக்கு அன்னம் ஊட்டுவோர் அடையும் பலன்

கூற்றை வென்ற குழகன் அடியரைப்
போற்றி அன்னம் பொலிவுற ஊட்டினோர்
ஆற்று மோர்கற்பம் ஆயிர கோடிமேல்
வீற்றி ருப்பர் உருத்திரன் மெய்ப்பதி. (128)

மூதெ யிற்சிவ லோகன் முதற்பதி
ஓது காலம் அநேகம் உவப்புறீஇ
ஏத மில்சிவன் போன்றங் கிசைந்தபின்
நீதி மன்னவ ராகி நிலத்தராய். (129)

சிந்தி மூல திமிரம் இருவினை
யந்தம் வீடென் பதுமூல பாசமும்
எந்தை பாதத் திணங்குவ ரேகமாய்
அந்த மில்குரா வன்திரு வாணையால். (130)

## சிவனடியாருக்குப் பிதிர்தினங்களில் அன்னம் கொடுப்போர் அடையும் பலன்

தென்பு லத்தவர் நாளில் திருவமு
தன்பி னிற்சிவ பத்தர்க் கருத்திடில்
துன்ப கன்று பிதிர்க்கள் சுகந்தழீஇ
இன்பி னிற்சிவ லோகத் திருப்பரே. (131)

## சிவனடியாருக்கு வாசநீர் கொடுப்போர் அடையும் பலன்

ஓது பாடலம் உற்பல மாதிய
சீத மார்சுகந் தம்தரும் தீம்புனல்
மாத வர்க்கு வணங்கி வழங்கினோர்
ஏத மில்வரு ணன்பதம் எய்துவார்.

### சிவனடியாருக்குக் கரகம் கொடுப்போர் அடையும் பலன்

யாக நித்நுனே அன்பர் பரித்திடக்
கரக மாதி கரத்தில் வழங்கினோர்
திருவி னுக்கிறை போற்றிடத் திவ்விய
வருட கோடி வரத்தொடு மன்னுவார். (133)

### சிவனடியாருக்குச் சுக்கு முதலியகொடுப்போர் அடையும் பலன்

சொற்ப யன்றரு சுக்குமுற் பத்திய
கற்ப யன்தரு பத்தர்க்கு நல்கினோர்
அற்ப கைக்கதிர் ஆதபன் போற்றவே
கற்ப மாயிரம் கோடியும் காண்பரே. (134)

### சிவனடியாருக்கெய்தும் வியாதிக்காக மருந்து கொடுப்போரடையும் பலன்

பெருந்த வர்க்குப் பிணிமருந் தாதியால்
வருத்தி மாற்றி மகிழ்ச்சிசெய் தோருகம்
சிரந்த கோடிநா றெய்தும் நிலையாய்த்
திருந்தி மேற்சிவ லோகம் திளைப்பரே.

### சிவனடியாருக்கு விபூதிப்பெட்டகம் கொடுப்போரடையும் பலன்

நீதி வெண்டிரு நீறு நிறைத்துநற்
பூதி யாலயம் புண்ணியர்க் கீந்துளோர்
சீத தீர்த்தங்கள் செய்பலன் எய்தியே
போத மார்சிவ லோகம் புகுவரே. (136)

### சிவனடியாருக்கு ஆகமம்கொடுப்போர் அடையும் பலன்

#### வேறு

ஒளியா ரோசைச் சிவாகமத்தை உண்மைச் சிவஞானிக்களித்தோர்
தெளிவா மியல்பில் தானவிதஞ் சேர வழங்கும் திறத்தினராய்

*விளியா வரன்போல் நெடுங்காலம் விருப்புற் றிருப்பர்படிப்போர்கட்*
*களியா நிற்போர்க் ககமகிழ அளிக்கும் பலமேல் அறைவாமே.* (137)

## படிப்போரும் ஆகமம் கொடுப்போரும் பதிபசு பாசத்தின் உண்மையறிவோரும் அடையும் பலன்

*அன்னோர் கோடி கோடிதரும் அதிக மான புண்ணியத்தை*
*முன்னோ னியலின் மொழிந்தபடி முற்று மடைதல் சத்தியமால்*
*இன்னோன்மையுறும்சிவஞானஇயலினியன்முப்பொருடெரிந்தே*
*பின்னோ கையுடன் பெறும்பலன்தான் பேசற்கரியபெருமையதால்.*
(138)

## சிவனடியாருக்கு உருத்திராட்சம் கொடுப்போர் அடையும் பலன்

வேறு

*செக்கர் மேனிச் சிவனடி யார்க்கணி*
*அக்க மாலிகை அன்புடன் நல்கினோர்*
*நக்க னார்பதம் நண்ணுவர் நண்ணியே*
*மிக்க ருத்திர லோகம் விரவுவார்.* (139)

## சிவனடியாருக்குக் குடை கொடுப்போர் அடையும் பலன்

*துண்ட வெண்பிறை வேணியன் தொண்டர்க்குத்*
*தண்டி னோடுயர் சத்திரம் ஈந்தவர்*
*கொண்ட தங்குல மாதொடும் வேந்தராய்*
*மண்த னிற்சத யோசனை மன்னுவார்.* (140)

## சிவனடியாருக்குப் பாதுகைகொடுப்போர் அடையும் பலன்

*நீங்க லாது நிறைசிவ நேசர்பால்*
*பாங்கி னலணி பாதுகை ஈந்துளோர்*
*ஓங்கு தேர்முதல் வாகன மூர்ந்துபோய்த்*
*தீங்கி லாத சிவபுரம் சேர்வரால்.* (141)

## சிவஞானதேசிகர் உபதேசக் கிரமம் இல்லாமற் சிவபுண்ணியஞ்செய்யிற் பயனில்லை எனல்

*புங்க மாஞ்சிவ புண்ணியம் தேசிகர்*
*தங்கள் வாக்குப தேசம தன்றியே*
*இங்கி யற்றின் இரும்பயன் இல்லையாய்*
*மங்கு மென்னும் வரம்புக லாகமம்.* (142)

## உத்தம மத்திம அதமதேசிகர் ஆவார் இவர் எனல் வேறு

*ஆகமத்திலிருபத்தையாயிரநற்சுலோகம்*
*அறிந்ததேசிகன்கனிட்டனைம்பதினாயிரர்தாம்*
*மோகமறவாராய்ந்ததேசிகன்மத்திமனே*
*முறைநமையினாலோரிலக்கமுயன்றவனுத்தமனே*
*ஏகனமலேசனருள்காமிகமுன்னாக*
*இயம்பியிடும்இருபத்தெட்டாகமத்துமிஃதே*
*பாகமிகுசாரார்த்சாரமெனவோரியலைப்*
*படித்துணர்ந்தோனியல்களெல்லாம்படித்துணர்பண்டிதனே.*

**சிவபுண்ணியத்தெளிவு முற்றிற்று.**

**திருச்சிற்றம்பலம்**

---

**ஸ்ரீ மெய்கண்ட தேவர் மிளிர்கழல் வெல்க.**

**ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவபுண்ணியத்தெளிவு

## செய்யுள் முதற்குறிப்பகராதி

உ

திருச்சிற்றம்பலம

"நம்பனை நால்வேதம் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லா லிருந்தான் தன்னைக்
கற்பகமாய் அடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே."

திருச்சிற்றம்பலம்

— திருநாவுக்கரசுநாயனர் தேவாரம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முத்திராலட்சணம்

1 ஆக்கிலோ முதல்நடு அனாமிவிரல் செவிகண்
மூக்கிலோ மறைத்தல்சண் முகமுத் திரையே.

2 பிடித்தகை தர்சனி நடுவிர லின்மிசை
அடுத்துற வளைப்ப தங்குச முத்திரை.

3 மண்டுநீர் பிடித்த வலக்கையை இடக்கரம்
கொண்டுமேல் வளைப்பது கும்பமுத் திரையே.

4 அங்குலி நான்கும் அங்குட் டத்தடி
தங்குற வளைப்பது சங்கார முத்திரை.

5 சேட்டை கனிட்டைமேற் சேர்ற விரலையும்
நீட்டி விரிப்பது நேத்திர முத்திரை.

6 இலங்குற முக்கால் இடக்கையில் வலக்கைத்
தலங்கொடு தட்டுதல் தாள முத்திரை.

7 பிடித்தகைத் தர்சனிப் பெருவிரல் நடுவிரல்
துடித்திடத் தெறிப்பது சோடிகா முத்திரை.

8 தகைபெறு முடியில் தர்சனி நிமிர்த்துப்
பகர்வலம் சுற்றுதல் பரிகைமுத் திரையே.

9 நெடியகை யிணைகளை நிமிர்த்தெதிர் முகமுற
அடிமுதல் முடியள வமைக்கின்மா முத்திரை

10 இருகைகள் கூட்டி இடையிடைச் சேர்த்திடும்
விரல்களில் தர்சனி விரல்கனிட் டைகளைப்
பார்த்திடு மத்திமை அநாமிகை களினுல்
சேர்த்துறப் பிடிப்பது தேனு முத்திரை.

11 பிடித்தகை தற்சனி பிறங்கிய மத்திமை
விடுத்திடு வதுகோ **விடாணமுத் திரையே.**

12 கருதிணைப் பெருவிரல் கனிட்டி கைமுதல்
விரல்நுனி தொடுவது **விற்புர முத்திரை.**

13 அஞ்சலி தன்னுள் அணிவிரல் இரண்டினும்
விஞ்சிய அங்குட்டம் மேவிலா **வாகனம்.**

14 மேவும்அஞ் சலிதனை விரித்ததோர் முகமுறத்
தாபனம் செய்வது **தாபன முத்திரை.**

15 பெருவிரல் உயர்ந்திடப் பிடித்தகை முட்டிகள்
சருவுற வளைந்திடில் **சன்னிதா னமதாம்.**

16 அன்னசன் னிதானத் தகமுறப் பெருவிரல்
தன்னை முட்டியில் நிறுத்தல்**சன் னிரோதனம்.**

17 பிணித்தகை விரித்துப் பெருவிர லினைநடுப்
பணித்திடப் பிடிப்பது **பிரும்மமுத் திரையே.**

18 பிரும்ம முத்திரை தருபா ணியின்நடு
விரல்பொரத் தொடுவது **விம்பமுத் திரையே.**

19 கைவிரல் குவித்ததில் கனிட்டைதற் சனிஎனும்
மெய்விரல் நீட்டல் **மிருகமுத் திரையே.**

20 பிடித்திடு வலக்கை பிறங்குதற் சனிநிமிர்த்
திடக்கையில் அடித்திடும் எனில்**திரா சனியே.**

21 பெருவிரல் இரண்டும் பிணைந்திட நிமிர்த்த
கரமிரண் டுறின்நமக் **காரமுத் திரையே.**

22 முரசுசி நான்கின் முட்டியின் நிமிர்த்த
தர்ச்சனி நுதியால் தட்டுதன் **அமுர்தமாம்.**

23 சிறுவிரல் நீட்டிச் சிறந்ததற் சனியுடன்
உறுபெரு விரல்தொடின் **உற்பவ முத்திரை.**

24 இருகைமுட் டியின்நிமிர்த் திட்டதற் சனிகட்
கேகின பெருவிரல் தெரிக்கின் **நாராசம்.**

25 அம்மலர் சாத்தற் கனமிகை பெருவிரல்
செம்மையில் செறிவது திவ்விய முத்திரை.

26 ஓரித் திடுகரம் உறநிமிர்த் தங்குலி
பாரித் திணைவது பதாகைமுத் திரையே.

27 தூய பதாகைச் சொற்பெரு விரல்நுதி
ஆயதற் சனிவலத் தடிதொடிற் சங்கம்.

28 உறுமிரு கையால் உள்ளுதற் குவித்துச்
சிறுவிரல் முதலாய்ச் செறிந்தநால் விரலிறும்
துன்னிய பெருவிரல் தொட்டுற நிமிர்த்திடில்
கைந்நிகழ் காள கன்னிகை முத்திரை.

29 அடுத்திடும் இடக்கையில் அங்குட்டம் அதனைப்
பிடித்திடு வலக்கைப் பெருவிரல் நிமிர்த்தாங்
கசைவுற இடக்கையில் அங்குலி களைவளைத்
திசைவுறப் பிடிப்ப திலிங்கமுத் திரையதாம்.

30 தன்றாட் கோத்தகைத் தற்சனிப் பெருவிரல்
மன்னிய நடுவிரல் மணிச்சிறு விரல்களைப்
பாங்குறப் பிடித்தபின் அனாவிர லினைநடுப்
பாங்குற நிமிர்ப்பது பஞ்ச முகமே.

31 இருகையங் குலிகளை எதிர்முகத் துள்ளுறச்
செருகிய பின்பிணைச் செங்கைகள் கூட்டி
நீட்டுதற் சனிகளின் நிமிர்த்துறப் பெருவிரல்
மூட்டிடின் மனோரத முத்திரை யாகும்.

32 பெறுகரம் கோத்தபின் பெருவிரல் நடுவிரல்
சிறுவிரல் நிமிர்ப்பது திரிசூல முத்திரை.

33 திரிசூ லம்தனில் செறித்ததற் சனியினை
மருவுறு மிகையனைத் திடின்மகா முத்திரை.

முத்திராலட்சணம் முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பதிபசு பாசப் பனுவல்

பெற்ற பிறப்பே பிறப்பா வடுதுறையில்
உற்றம் பலவாண னேயுகந்து—சொற்ற
பதிபசு பாசப் பனுவலினை வாக்கான்
மதிபகர வாய்த்தலிஞம் வந்து.

அறிவுபதி, அறிவித்தால் அறிவது ஆன்மா, அறிவித்தாலும் அறியாதாணவம், மாயை அறிவும் அறியாமையுமாம். கருமந்தனு நின்றபடி. ஆன்மா ஆணவமாய் நின்றபோது அறிவற்று மலமாய்ச் சிவத்தை அறிவித்தாலும் அறியான். மலம் நீங்கிச் சிவமானபோது சிவத்தைஅறிவித்தால்அறிவான். ஆன்மாவைச்சிவம் ஆவரித்தபோது சிவம் அல்லது ஒன்றையும் அறியான். ஆன்மாவை மலம் ஆவரித்த காலத்து அறிவித்தாலும் அறியான் என்பதற்கு உதாரணம்:- 'அறிவிக்க அன்றி அறியா' என்றும், 'ஒன்றதாய் அநேக சத்தி' என்றும், 'அந்நியமானவை உணர்த்தி' என்றும், 'பன்மொழிகள் என்றுணரும்' என்றும்; பெத்தமே அறிவாய்த் தன்னை வினையைத் தலைவனை அறிவித்தாலும் அறிவு செல்லாமையைப் பண்ணிக் கொண்டு நிற்கும் மலச்செயல். மலம் நீங்கிச் சுத்தமான இடத்தை அறிவித்தால் அறிந்து வருகிறதற்கு உதாரணம்:— 'உளது இலது என்' றென்றும்; மாயை மாமாயை கன்மம் மூன்றும் ஆன்மாவை ஆவரித்து அது அதுவாய் நிற்பதற்கு உதாரணம்:— 'அது என்னும் ஒன்றன்' என்றும், 'பர ஞானத்தால் பரத்தை' என்றும், இந்த வகையால் சிவத்தை ஒழுங்கிலே ஆசாரியர் திருவாக்குக் கேள்வியாலே அறியவும்.

இது வரும்படிக்கு உபாயம்: சாலோகத்துக்கு உபாயம் 'தாத மார்க்கம்' என்றும், சாமீபத்துக்கு உபாயம் 'புத்திர மார்க்கம்' என்றும், சாரூபத்துக்கு உபாயம் 'சகமார்க்கம்' என்றும், சாயுச்சியத்துக்கு உபாயம் 'சன்மார்க்கம்' என்றும், 'ஞான நூல் அதனை ஓதல்' என்றும் இந்த ஒழுங்கிலே உண்மை கூடாது இருந்தால் 'அசத்தாயுள்ள வன்ன பேதங்கள்' என்றும், 'நிர்க்குணனாய்' என்றும், 'இந்நிலைதான் இல்லையே' என்றும், 'விளம்பிய வகை' என்றும்; இது கூடாது இருந்தால் விதிப்படி பஞ்சாக்கரத்தை உச்சரிக்க என்றும் அல்லவோ சொல்லி இருக்கிறது.

அல்லாமல், கண்ணை மூடிக்கொண்டு காணங்களை அடக்கி இருக்கச் சிவன் தானே கூடிநிற்கும் என்பாரை மறுத்துக் கூறியது.

'பாவகமேல்தான்' 'அசத்தா' என்றும், 'காணங்கள் கெட்டு இருக்கை' என்றும், 'ஓடுங்கிடா காணந்தானே' என்றும்; 'எண்டிசை விளங்க' என்னும் 'அகவல்' முற்றும் அறிக.

பாடாணவாதி கேவலம் போலே காண்டலும் கேட்டலும் இல்லாமலிருக்கிறதே 'முத்தி என்னில் "காணுபாவ மாணம்" "கருமாம் சென்று இவன்தான் ஒன்றி" என்றும் இப்படி ஆகமங்களிலே மறுத்துச் சொல்லியிருக்கையினாலே அதற்குச் சுருதி இல்லையே, சுவானுபவம் இல்லையே, குருவாக்கில்லையே, கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்று நாலோடே கூடியிருக்கிறதும் அல்லவே ஆகையினாலே நிட்டை என்பது எல்லாம் சுருதி குருவாக்குச் சுவானுபவத்துடனே கூடியிருக்கிறதே நிட்டை என அறிக.

பதிபசு பாசப் பனுவலருள் செய்தான்
பதிபசுபா சம்தெரிவோர் பற்றப்—பதிபசுவா
மாற்று வடுதுறையில் வந்தம் பலவாணன்
நோற்றார்கள் ஞேக்கக் கதி.

**பதிபசு பாசப் பனுவல் முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அளவை அட்டவணை

திருவாவடுதுறையாதீனம்

1954

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# அளவை அட்டவணை

பிரமாணமாவது:-பிரத்தியட்சம், அநுமானம், சத்தம், அபாவம், அருத்தாபத்தி, உவமானம் ஆக 6 : பாரிசேடம், சம்பவம், ஐதிகம், சகசம் ஆக 4 : ஆகப் பத்து. இவைகளுக்கு மேலும் அளவைகளுள. அவைகளெல்லாம் பிரத்தியட்சம் அநுமானம் சத்தம் என்கிற மூன்றில் அடங்கும். 1. பிரத்தியட்சம் :- 1. ஐயக்காட்சி—குற்றியோ மகனோ? சிப்பியோ வெள்ளியோ? பாம்போ பழுதையோ? ஆணோ பெண்ணோ? சினையோ பாலோ? இவைபோலப் பலவும் உள. 2. திரிவுகாட்சி—குற்றியை மகன் எனல், மகனைக்குற்றியெனல். இப்படி மற்றவையும் கொள்க. 3. சவிகற்பக்காட்சி—நாமம் சந்தனம் சாதிமலர்காய், குணம் வாசனை, கிரியை அரைபடல், பதார்த்தம் கட்டை ஒன்றையுமே அறிதல். ஆக காட்சி 4. இந்திரியக் காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக்காட்சி, யோகக்காட்சி ஆக 4.

1. இதில் இந்திரியக் காட்சியாவது :—ஆன்மா, ஆன்மாவினுடைய அறிவு, பஞ்சேந்திரியத்தில் ஒன்று, முச்சுடர் முதலானதில் ஒளி ஒன்று, ரூப முதலான ஐந்தில் ஒன்று ஆக 5; இவ்வைந்தையும் பற்றிக்கொண்டு ஐயந்திரிவு விகற்பம் இல்லாமல் அறிவதே. 2. மானதக்காட்சியாவது :- சத்தாதி விடயங்கள் சோத்திராதி பஞ்சேந்திரியங்களினாலே வந்த பின்பு அந்தக்கரணங்களிலே வந்து அதன் பின்பு ஆன்மாவினிடத்திலே வருதலேயாம். 3. தன் வேதனைக்காட்சியாவது:-இன்பத்துன்பங்களை அராகதத்துவ முதலானவைகள் ஆன்மாவினுடைய அறிவுக்குக் கொடுத்தலேயாம். 4. யோகக்காட்சியாவது:—இயமாதிசமாதிகளிலே மும்மலங்களுடைய பலத்தை வாட்டி அந்நிய தேசங்களிலும், நிகழ்காலம் அல்லாத காலங்

களிலேயும் உள்ள பொருள்களை எல்லாம் மயக்கம் இல்லாமல் அறிதலேயாம். ஆக 4. ஆகக்காட்சி எட்டு.

2. **அனுமானம் :**— கண்ணிலே காணப்பட்டு விட்டு நீங்காமலிருக்கிற ஏதுவினாலே கண்காணாத பொருளைத் துணிந்தறிதல். சுவார்த்த அனுமானம், பரார்த்த அனுமானம் என அது இரண்டு வகையாக இருக்கும். இதில் சுவார்த்த அனுமானமாவது:— பட்சம் சபட்சம் விபட்சம் என்னும் மூன்றில் ஓரிடத்திலே சகசவேது காரிய ஏது அநுபலத்தியேது என்கிற மூன்றில் ஓர் ஏதுவினாலே அந்த ஏதுவையுடைய பொருளைத் துணிந்தறிதல். பரார்த்த அனுமானமாவது:— முன் சொன்னவைகளிலே தானறிந்தபடிக்குப் பிறருக்குத்தெரியச் சொல்லியறிவித்தல். இப்படி அறிவித்தல் அன்னுவயம் என்றும், வெதிரேகமென்றும் இருவகைப்படும். அன்னுவயம் என்கிறசொல்லுக்குப்பொருள் கூட்டுகிறது. வெதிரேகமென்கிற சொல்லுக்குப்பொருள் தள்ளுகிறது. பக்க மூன்றில் பட்சமாவது கண்காணாத பொருள் இருக்கும் இடம் : நிகர்பட்சமாவது உவமை சொல்லுகிறவிடம் : நிகரில் பட்சமாவது அந்தப்பொருளில்லாதவிடம். பட்சத்திலேயும் சபட்சத்திலேயும் பொருளுண்டு, விபட்சத்திலே பொருளில்லை.

1. **சகச ஏதுவாவது:** ஒரு சொற்குப் பல பொருளிருந்தால் வினைசார்புஇனம்இடம்முதலானவைகளினாலே பலபொருள்களையும் விட்டு ஒரு பொருளிலே துணிதல். அது எப்படி? என்னில், மாப்பூத்தது ; மாவீழ் கொச்சி ; மாவுரியும் வளர்ந்தன ; மாமறுமார்பன். 2. **காரியஏதுவாவது:** கண்கண்டபுகையினாலே கண்காணாத நெருப்புண்டென்று துணிதல், 3. **அநுபலத்தி ஏதுவாவது:** சரீரத்திலே குளிரில்லாதபடியினாலே பனி பெய்யவில்லை என்று துணிதல். **அன்னுவயமாவது:** கண்கண்ட புகையினாலே கண்காணாத நெருப்பைத்துணிதற்கு அடுக்களையை உவமானம் சொல்லுதல். **வெதிரேகமாவது:** நெருப்பில்லாத இடத்துப்புகையில்லை என்று துணிதற்குத் தாமரைத் தடாகத்தை உவமை சொல்லுதல். இப்படிப் பட்சம், ஏது, அன்னுவய உபமானம், வெதிரேக உபமானம் இந்த நான்கினாலும் மலையிலே நெருப்பு உண்டு என்று அறிக என்பது.

இப்படியன்றிப் பிரதிக்ஞை, ஏது, திருட்டாந்தம், உபநயம், நிகமனம் ஆக ஐந்தினாலும் நெருப்புண்டென்று அறியலாமென்று துணிவு சொல்லுவாருமுளர்.

முதனாள் பூவையும் பரிமளத்தையும் பிரத்தியட்சமாகக் கண்டவன் மறுநாட் பூவைக் காணாமல் வாசனையினாலே இன்ன பூவென்று நிச்சயித்தல் காட்சியாலனுமானம். ஒருவன் சொல்லுகிற வசனத்தினாலே அவனுக்கு அறிவு உண்டென்று அறிகிறது அல்லாமல் அவனுடைய அறிவை இவ்வளவென்று நிச்சயித்தல் அனுமானத்தாலனுமானம். முற்சென்னனங்களிலே செய்த கன்மங்களுக்கு இந்தச் சென்மத்திலே பலன் வந்தது இந்த வழக்கினாலே இந்தச் சென்மத்திலே செய்த கன்மங்கள் காரணமாக இனி மேல்வரும் பிறப்புகளிலே பலன் வருமென்று துணிதல் சத்தத்தால் அனுமானம். சரியை கிரியைகளைச் சொல்லுகிற ஆகமங்களுக்குத் தந்திரகலை என்று பெயர். யோகத்தைச் சொல்லுகிற ஆகமங்களுக்கு மந்திரகலை என்று பெயர். திரிபதார்த்தங்களைச் சொல்லுகிற ஆகமங்களுக்கு உபதேசகலை என்று பெயர். அபாவம் என்கிறதற்குப் பொருள் இல்லை என்கிறது. அது என்றும் அபாவம், இல்லதனபாவம், ஒன்றிலொன்றபாவம், உள்ளதனபாவம், அழிவுபாட்டபாவம் ஆக 5. இது முயற்கோடில்லை; உண்ணாமலிரான்; கடத்திற்படமில்லை; வீட்டிலே அரிசியில்லை; குடமுடைந்தது ஆக 5. அருத்தாபத்தியாவது செந்தாமரைப்பூ வந்தது என்று சொன்னவுடனே வெண்டாமரைப்பூ வரவில்லை என்று அறிதல். உவமானமாவது வினை பயன் மெய் உரு ஆக 4. பாரிசேடமாவது இவர் இருவருள் இவனே கள்வன் என்று சொன்னவுடனே மற்றவன் கள்வன் அல்லன் என்று அறிதல். சம்பவமாவது நூறு பணந்தந்தானென்று சொன்னவுடனே ஐம்பதுபண நாற்பதுபண முதலானதும் அதற்குள்ளே இருக்கிறதென்று அறிதல். ஐதிகமாவது இந்த மரத்திலே ஒரு பேய் உண்டென்று முற்காலங்களிலே ஒருவன் சொன்னதைப் பரம்பரையில் கேட்டுப் பேய் உண்டென்று இப்போது நிச்சயித்தல். சகசமாவது இயல்பேதுத்தானே அளவைகளினாலே அறியப்படும் பொருள்கள் மூன்று வகைப்படும். அது கூட்டப்பொருள் தோப்பு.

பொதுப் பொருள் மாமரங்கள். சிறப்புப் பொருள் தேமாமரம். அந்நிய சாதியாகிய தோப்பையும் தன் சாதியாகிய மாமரங்களையும் நீக்கிப் பொதுவாக மாமரம் என்கிறது பொதுவியல்பு. ஆபாசமாகிய பொய் ஆகாயக் குளத்திலே பூ; இது பட்சாபாசம், இது நான்கு வகைப்படும். ஒருவன் இன்று கல்யாணம் செய்தான் அது எந்த ஏதுவினாலே? அவன் நேற்றுச் செத்துப்போனபடியினாலே; இது ஏது ஆபாசம். இது மூன்று வகைப்படும்; இவை இருபத்து ஒன்றாம். ஒரு பெரிய யானை வந்தது. அது யாதுபோலே இருக்கிறது? ஒரு சிற்றெறும்பு போலே இருக்கிறது; இது உவமானவாபாசம். இது பதினெட்டு வகைப்படும். எட்டும் இரண்டும் எத்தனை என்று கேட்டால் ஒன்பது என்று சொன்னவனை இப்படி என்? சொன்னாயென்று கேட்டால் நான் ஆருடனே சொன்னேன் என்று சொல்லுகை தோல்வித்தானம். இது இருபத்திரண்டு வகைப்படும்.

அளவைஅட்டவணை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அளவை இலக்கணம்

## முதலாவது பிரத்தியட்சம்

உலகத்துப் பதார்த்தங்களையெல்லாம் அளக்குமிடத்து எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவினால் அளந்தறியுமாறுபோல, பதி பசு பாசம் முதலிய பொருள்களைப் பக்குவான்மாக்களுக்கு அளந்து அறிவிக்கையின் பொருட்டு நியாய வகையான் விளக்குவதாய் உள்ளது அளவை எனப்படும்.

" இராகம் அறியார் இசைப்பயன் தானறியார்
தராதரம் அறியார் சற்காரியம் அறியார் "
" ஓரார் அளவை ஒருபயனும் தானறியார்
ஆராய்ந் தளவை அறிந்து கொளீரே "

என்பது காண்க. அளவை—பிரமாணம். அது பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம் என மூன்றுவகைப்படும். காண்டல், கருதல், உரை என்பதும் அது. அபாவம் பொருள் ஒப்பு என மூன்றும் கூட்டி ஆறு என்பர் நையாயிகர்; அநுபலத்தி, அருத்தாபத்தி, உவமானம் என்பன அவை. அபாவம் என்பது உண்டு என்னும் ஞானத்தின் இன்மை, அநுபலத்தி. பொருள் என்பது அருத்தாபத்தி. ஒப்பு உவமானம். அன்றியும், பாரிசேடம், சம்பவம், ஐதிகம், சுபாவம் என்னும் இந்நான்கையுங்கூட்டிப் பௌராணிகர் முதலியோர் பத்தாகக் கொள்வதும் உண்டு. பாரிசேடம்-ஒழிபு; சம்பவம்-உண்மை; ஐதிகம்—கர்ண பரம்பரையாக வரும் வாக்கியம்; சுபாவம் – இயல்பு. அபாவம், இயல்பு, உவமானம் காண்டலிலும்; அருத்தாபத்தி,

உண்மை, ஒழிபு அநுமானத்திலும்; ஐதிகம் உரையிலும் அடங்கும் என்க. இவையெல்லாம் மேற்கூறிய காண்டல், கருதல், உரை என்னும் மூன்றினுள்ளே அடங்கும் எனக்கூறுவர்.

பிரத்தியக்ஷம் ஒன்றுமே பிரமாணம் என்பர் சார்வாகர். பிரத்தியக்ஷமும் அநுமானமும் ஒழித்து ஆகமம் பிரமாணம் அல்ல என்பர் பௌத்தர்.

இனி, உலகாயதர் காண்டல் ஒன்றுமே கொள்வர். பௌத்தரும், வைசேடிகரும் காண்டலுடன் அனுமானமும் கொள்வர். சாங்கியர் காண்டல் கருதல் உரை என்னும் மூன்றுபிரமாணமும் கொள்வர். நையாயிகர் அம்மூன்றினுடன் உபமானமும்கொள்வர். அருகரும், பிரபாகரரும் அந்த நான்குடன் அருத்தாபத்தியும் கொள்வர். பாட்டரும் வேதாந்தியும் அவ்வைந்துடன் அபாவமும் கொள்வர். பௌராணிகர் மேற்கூறிய ஆறு பொருளுடனே சம்பவமும் ஐதிகமும் கொள்வர். இப்படிச் சமயிகள் பேதப் படுத்திக் கூறுகையால் ஸ்ரீ அருணந்திதேவநாயனார் பத்துப் பிரமாணம் உண்டு என அருளிச்செய்தனர்.

1\. பிரத்தியட்சமாவது—ஐயம் திரிபு இன்றி நிர்விகற்பத்தை முன்னாகக் கொண்டு குற்றமற அறிவதாம்.

2\. ஐயமாவது – கண்டபொருளை இரண்டுபடக் கருதல், உதாரணம்—குற்றி கொல்லோ? மகன் கொல்லோ? தோன்று நின்ற உரு என்றல், அஃதாவது பிரபஞ்சம் ஒருவனால் படைக்கப் பட்டதோ? தானே உண்டானதோ? என்று ஐயப்படுதலாம்.

3\. திரிபாவது—தோன்றின பொருளை வேறுபடக் கருதல். உதாரணம்—தூரத்திற் கண்ட குற்றியை மகனெனக் கருதல். அஃதாவது பிரபஞ்சம் தானே உண்டாகும் என்றும், பதியில் ஒடுங்கும் என்றும் கொள்ளுதலாம்.

விகற்பமாவது :—சவிகற்பம், நிர்விகற்பம் என இருவகைத்து. சவிகற்பமாவது இன்னபெயர், இன்ன சாதி, இன்ன நிறம் (குணம்), இன்ன தொழில், இன்ன பொருள் (வஸ்து) உடைத்து என அறிதல். நிர்விகற்பமாவது தோன்றின பொருளின் உண்மை சற்றும் சொல்லுதற்கு ஒண்ணாத அறிவாயிருக்கை. (இஃது ஒன்று தோன்றா நின்றது எனப் பொருளுண்மை மாத்திரையே அறியும் அறிவு எனக்கொள்க)

இப்பிரத்தியட்சமானது இந்திரியக்காட்சி, மானதக்காட்சி, தன்வேதனைக் காட்சி, யோகக் காட்சி என நான்கு வகைப்படும்.

இந்திரியக்காட்சியாவது—கண் முதலிய பொறிகளையும், அவற்றிற்குத் துணையாய் வலிமைசெய்து உடன் நிற்கும் தேயு முதலிய பூதங்களையும், அப்பூதங்கட்கு முதற்காரணமாய் அவற்றைவிட்டு நீங்குதலின்றி உடனாய உருவம் முதலிய தன்மாத்திரைகளையும், அதிட்டித்துக்கொண்டு ஐயம், திரிபு, பெயர், சாதி முதலிய விகற்பமின்றி உருவம் முதலிய ஐம்புலன்களை நிர்விகற்பமாய் அறியும் அறிவே (சிற்சத்தி)யாம்.

இவ்விந்திரியக் காட்சியின் சம்பந்தபேதம் ஆறும். அவையாவன சையோகம், சையுத்தசமவாயம், சையுத்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேதசமவாயம், விசேடண விசேடியபாவம் என்பன. [சம் என்னும் சொல் சைஎனத் திரிந்தது. சம்பந்தம் எனினும் சந்நிகர்ஷம் எனினும் ஒக்கும்]

சையோகமாவது— கண்ணுக்கும் கடத்துக்கும் உண்டான சம்பந்தம்.

கடத்தைஅறியுமிடத்து இது கடம்விடயமாயிருக்கின்ற ஞானமானது உண்டாகின்றபொழுது, கண்ணாகிய இந்திரியத்திற்கும் கடமாகிய விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்தம் ஆகும். இது பிரிந்திருக்கின்றபொருள்களினுடையசம்பந்தம் ஆகையினாலே சையோகம் எனப்பட்டது. சையோகம்-சம்யோகம்.

சையுக்தசமவாயமாவது—கடரூபத்திற்கும் (நீலாதி) கண்ணுக்கும் உண்டான சம்பந்தம்.

கடத்திலே இருக்கிற வடிவமானது கண்ணினாலே அறியப் படுகின்றபொழுது கண்ணாகிய இந்திரியத்திற்கும் கடத்தைப் பொருந்தியிருக்கின்ற நீலாதி ரூப விடயங்களுக்கும் உண்டாயிருக் கிற சம்பந்தம் ஆகும். கண்ணோடு கூடியிருக்கிற கடத்திலே ரூப மானது சமவாயமாயிருக்கையினாலே இதனைச் சையுக்த சமவாயம் என்றது.

சையுக்த சமவேத சமவாயமாவது—கடரூபத்தில் ரூபத் தன்மை முதலிய சாமானியத்திற்கும் கண்ணுக்கும் உண்டான சம்பந்தம்.

கடத்திலிருக்கிற ரூபத்தைப் பொருந்திய ரூபத்துவமானது கண்ணால் அறியப்படுகின்றபோது கண்ணிந்திரியத்திற்கும் உருவத் துவ விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்தமாகும்.

சமவாய சம்பந்தமாவது—சத்தத்திற்கும் செவிக்கும் உண் டான சம்பந்தம்.

சோத்திரேந்திரியத்தினாலே சத்தமானது அறியப்படுகின்ற பொழுது சோத்திரேந்திரியத்திற்கும் சத்தமாகிய விடயத்திற்கும் உண்டாகிய சம்பந்தமாம். சோத்திரம் ஆகாசம் இடமாக நின்று அறிகையினாலே இது சமவாயம் எனப்பட்டது. சமவாயம்—ஒற் றுமை: நீக்கமில்லாமை.

சமவேத சமவாயமாவது—சத்தத்தின் தன்மைக்கும் செவிக் கும் உண்டான சம்பந்தம்.

சோத்திரத்திலே சத்தத்தின் தன்மையைக் காண்கின்ற பொழுது சோத்திரேந்திரியத்திற்கும் சத்தத்துவ சாமானிய விட யத்திற்கும்உண்டாகியசம்பந்தம். சோத்திரத்திலே சமவேதமாய்

இருக்கிற சத்தத்திலே சத்தத்துவம் சமவாய சம்பந்தமாய் இருந்த விஞலே ஸ்ததசமவேதசமவாயம் எனப்பட்டது.

விசேடண விசேடிய பாவமாவது—கண்ணுடனே கூடியிருக்கிற பூமியிலே கடத்தினுடைய அபாவத்தை அறிகிற சம்பந்தம். பூதலம் விசேடணம்; கடாபாவம் விசேடியம்.

இந்தப்பூமியில் கடம் இல்லை என்றபொழுது கண்ணுடனே கூடியிருக்கிற பூமியிலே கடத்தினுடைய இல்லாமையானது அறியப்படுகின்றது. அப்பொழுது கண்ணுடனே கூடினபூமி விசேடணமும், கடாபாவம் விசேடியமும் ஆகும். கடாபாவத்தையுடையது பூதலம் என்ற பொழுது கண்ணுடனே கூடின பூமி விசேடியமும் கடாபாவம் விசேடணமும் ஆகும்.

இனி, மானதக்காட்சியாவது— ஞானேந்திரியமானது சத்தாதி விடயங்களைப் பொருந்தி, ஐயம் திரிபு அற, சவிகற்பமாகப் புத்திதத்துவத்தால் அறிந்த அனுபவத்தை மனதிலே அநுசந்தானம் பண்ணுதல்.

தன் வேதனைக்காட்சியாவது—விஷயங்களில் உண்டாகிய சுக துக்கங்களை அராகம் முதலிய ஐந்து தத்துவங்கள் ஆன்ம ஞானத்தினிடத்திலே செலுத்த நான் சுகி, நான் துக்கி என்பது முதலாக வரும் ஞானம். தன் வேதனைக்காட்சி—ஸ்வவேதனப்ரத்தியக்ஷம்.

யோகக் காட்சியாவது—இமயம் நியமம் ஆசனம் பிராணயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானங்களோடு கூடிய சமாதியாலே இந்திரியங்கள் ஒவியாதபடியிருந்து செல்காலம் நிகழ்காலம் வருங் காலங்களின் நிகழ்பவைகளையும் அந்நிய தேச வியாபாரங்களையும் இருந்த விடத்தில் இருந்து எல்லாவற்றையும் அறியத்தக்க அறிவு.

இக்காட்சிகள் அன்றி, சில போலிக்காட்சிகளும் உள. அவையாவன—கண்டுணராமை, உணர்ந்ததை உணர்தல், நினைப்பு என மூன்றும்.

கண்டுணராமையாவது சில பொருள்களைக் கண்டு அவற்றின் பெயர் அறியாதிருத்தல்.

உணர்ந்ததைஉணர்தலாவது முன்பு குளிர் வந்து உற்ற காலத்து நெருப்பு மருந்தென்று அறிந்தவன் பின்பு அதற்கு இது மருந்து என்று உணர்தல்.

நினைப்பாவது குழவிப்பருவத்தே தாய் தந்தையரை இழந்தோன் காரணம் கருதாது நினக்கு இன்னார் தாய்தந்தை என்று பிறர் சொல்ல அதனைக் கருதிக் கோடல்.

முதலாவது பிரத்தியட்சம் முற்றிற்று.

---

## இரண்டாவது அனுமானம்

அனுமானமாவது தன்னை விட்டு நீங்காத வியாத்தி பொருந்தின ஏதுவைக்கொண்டு மறைந்தபொருளை அறிவது. அனுமானம் அனுமிதிக்குக் காரணமாய் உள்ளது. அநுமிதி — ஆராய்ச்சியால் தோன்றும் ஞானம். இது தன் பொருட்டனுமானம், பிறர் பொருட்டனுமானம், பூர்வானுமானம், அனுமானானுமானம், ஆகமானுமானம் என ஐந்தாம்.

தன் பொருட்டனுமானமாவது – பக்கம் சபக்கம் விபக்கம் என்னும் மூன்றனும், இயல்பேது காரியவேது அனுபலத்தியேது என்னும் மூன்று ஏதுக்களை உடைத்தாயிருக்கப்பட்ட பொருள்களை ஆராய்ந்து அறியத்தக்க அறிவு.

பிறர்பொருட்டனுமானமாவது–பக்கம் மூன்றனும், ஏது மூன்றனும் பிறருக்கு அறியும்படி அறிவிக்கத்தக்கது. இவ்வனுமானம் அந்துவயம், வெதிரேகம் என இரண்டாம்.

பக்கமாவது—தான் ஐயுற்று(த் துணிந்து) அறுதியிட்டதொரு பொருளுக்கு இடமாயிருப்பது. அஃதாவது மலையில் புகையைக் கண்டபோது இந்த மலையின்கண் நெருப்பு உண்டு என்று துணிந்து கூறுதல். அஃது எக்காரணத்தால்? எனில், இடையறாமல் புகை யுண்டாகையால் என்பது.

சபக்கமாவது—தான் ஒன்றை முன் அறுதியிட்ட பொருளுக்கு ஒத்திருத்தலாகக் கூறுதற்கு இடமாதல். அஃதாவது புகையால் அனல் உண்டு என்று அறிந்தது எதனால்? எனில், தான் முன் கண்டு அநுபவித்த அடுக்களைபோலக் காணப்படுதலால்என்பது.

விபக்கமாவது—தனக்கு ஒவ்வாத பக்கமாகும். தான் அறுதியிட்டது ஒரு பொருளைச் சென்று பொருந்தாத இடம். அஃதாவது யாதொரு இடத்தில் அக்கினி இல்லை, அவ்விடத்துப்புகையும் இல்லை. அஃது என் போல? எனில், மடுப்போல என அறுதியிடுதற்கு இடமாதல்.

இயல்பு ஏதுவாவது—தருமத்தினுல் தருமியை அறியும் ஏது; இதனைச் சகச ஏது என்பர். மாப்பூத்தது என்புழி மா மரத்தை அறிவித்தல். மா என்பது இலக்குமி, யானை, குதிரை, வண்டு முதலிய பல பொருள்களை யுணர்த்தும் சொல். ஆயினும், பூத்தது என்னும் சொல் ஆற்றலால் இயல்பாகவே மரத்தை யுணர்த்தியது காண்க. மாமுதலிய சொற்கள் மாமுதலிய பொருள்களை உணர்த்துதற்கண் வேறு காரணம் இன்றி அச்சொற்களின் இயல்பான் உளதாகிய ஆற்றல். மாப்பூத்ததென்றால் மரத்தின்மேல்நிற்பது. மாப்பாய்ந்தது என்றால் குதிரையின்மேல் நிற்பது. பிரபஞ்சம் தோன்றி நிற்கையால் இதற்கு ஒரு பதி உண்டு, பசு உண்டு, பாசம் உண்டு எனப்படுதலாம் என்பர்.

காரிய ஏதுவாவது—புகையை முன்பு கண்டு அனுபவித்த வனுக்கு அவன் மறையநின்றபோது அப்புகை தானே தனக்குக் காரணமான அனலை உண்டு என்று அனுமித்து அறிவிப்பதாம்.

காரியமாகிய பிரபஞ்சமானது தனக்குக் காரணம் ஆகிய மாயையைக் காட்டுவதாம் என்க.

அநுபலந்தி ஏதுவாவது—குளிர் இல்லாதது கொண்டு பனியின்மையை அநுமித்தறிதல். அஃது என்போல? எனில், கர்த்தா இல்லையாயின் பிரபஞ்சகாரியம் இல்லை; ஆன்மா இல்லையாயின் தேகமில்லை; மாயை இல்லையாயின் தத்துவ தாத்துவிகங்கள் இல்லை என அறிவதுபோல்வதாம்.

இனி, சொற்கள் வினையைக்கொண்டு வினைமுதலை உணர்த்துங்காலத்து அவ்வினையும் இயல்புஎது எனப்படும். வினையைக் கொண்டு வினைமுதலை அறிதலும், காரிய உண்மையைக் கொண்டு காரண உண்மையை அறிதலும், காரிய இன்மையைக் கொண்டு காரண இன்மையை அறிதலும் என அநுமான உணர்ச்சி மூவகைப் படும். இதனையே இயல்பு, காரியம், அநுபலத்தி என முற்கூறப் பட்டது. காரியம் எனினும் உபலத்தி எனினும் ஒக்கும். உள்ளதென்னும் உணர்வு உபலந்தி; இல்லது என்னும் உணர்வு அநுபலந்தி. அச்சொல்லும் அந்நுவயச்சொல், வெதிரேகச் சொல் என இருவகையாம். அந்நுவயம் — உடன்பாடு, வெதிரேகம்—எதிர்மறை. இவ்விருவகைச் சொற்களையும் தனித்தனி மேற்கோளும், ஏதுவும், உவமானமும், உபநயமும், நிகமனமும் என ஐவகை உறுப்புகளால் இணங்கவைத்துக் கூறுவர் தார்க்கிகர் முதலியோர்.

காரிய ஏதுக் கூறவே, ஒற்றுமைபற்றிக் காரணஏதுவும் கொள்ளப்படும். அஃதாவது, இடித்து மின்னி இருண்டெழுந்த மேகம் மழைபெய்தலைக் காட்டுவது போல்வதாம்.

அந்நுவயச்சொல் :— மேற்கோள்—இம்மலை தீ உடைத்து, ஏது—புகையிருத்தலினால், உவமானம்—புகையிருக்கும் அடுக்களை போல், உபநயம்—இம்மலையும் புகையுடைத்து, நிகமனம்—ஆதலால் தீயுடைத்து என்பது.

வெதிரேகச்சொல் :—மேற்கோள்—இம்மலையிற் புகையில்லை, ஏது—நெருப்பில்லாமையால், உவமானம்—நெருப்பில்லாத தாமரைத் தடாகம் போல், உபநயம் — இம்மலையினும் நெருப்பில்லை, நிகமனம்—ஆதலால் புகையில்லை என்பதாம். மேற்கோள்—பிரதிக்ஞை. ஏது—காரணம். உவமானம்—திருட்டாந்தம். உபநயம்—திருட்டாந்தத்தைச் சார்த்திக் கூறுவது. நிகமனம்—முடிந்தது முடித்தல். வெதிரேகமெனினும், விபக்கமெனினும், எதிர்மறை எனினும், ஒவ்வாத பக்கமெனினும், மீட்சி மொழி எனினும் ஒக்கும்.

பூர்வக்காட்சியநுமானம் :— வாசனை முதலிய ஏதுவைக் கொண்டு காட்சிக்கு விடயமாகும் வாசனையுடைய மலரை முன் கண்ட உணர்ச்சியினால் இவ்விடத்து மலர் உண்டு என்று அறிதலாம்.

கருதலநுமானம் :—சொல்லப்பட்டவார்த்தை முதலிய ஏதுவைக் கொண்டு கருத்திற்கு விடயமாகும்படி சொல்லிய அவன் அறிவின் அளவு முதலியவற்றை அறிதலாம்.

உரையநுமானம் :— மேலே கூறப்பட்ட இரண்டினும் வேறாய் முறைமையினால் முன்வினை எனப்படும் இதம் அகிதங்களாவன, முற்பிறவியிற் செய்யப்பட்ட முயற்சியேயானால், இப்பொழுதும் அம்முயற்சிகளைச் செய்தால் மேலைக்கு வினையாகும் என்றாற்போல், நூல்களுள் சொல்லியதுகொண்டு சொல்லாத பொருளையும் ஒப்புமைபற்றி ஊகித்துத் துணிதலேயாம் என்க.

இரண்டாவது அநுமானம் முற்றிற்று.

---

## மூன்றாவது-ஆகமம்

---

ஆகமமாவது :—அநாதியே மலமில்லாதவரும், சர்வஞ்ஞத்துவாதி எண்வகைச்சிற்குணங்களையுடையவரும் ஆகிய சிவபெருமான் காருண்ணியத்தினாலே அருளிச்செய்த காமிகம் முதலிய ஆகமங்கள்

இருபத்தெட்டுமாம். ஆகமம் பரம ஆப்தரிடமிருந்து வந்தது எனப் பொருள்படும். வேதமும் ஆகமம் எனப்படும். அது தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்று வகையாம்.

தந்திரகலையாவது:- சத்த சாமர்த்தியத்தாற் கொள்வது, அத்தசாமர்த்தியத்தாற் கொள்வது, அல்லது வைப்பு சத்தியினாற் றன் கொள்வது என இம்மூன்று விதத்தாலும் ஆகமாந்தரங்களிற் கண்டு செய்வதாம். இனி, இது சரியா கிரியா பாதப்பகுப்பு ஆதலால் கருமகாண்டம் பற்றிப் பின்னொடு முன் மாறுகோளின்றிச் சரியா கிரியா பாத கிருத்தியங்களைப் போதிப்பதென்பர். இதனை மிருகேந்திர பத்ததி வியாக்கியையிலும் விளங்க அறிக.

மந்திரகலையாவது:-யாதாமொருவன் எந்தத்தெய்வத்தைஆராதித்தான் அந்தந்தத் தெய்வங்களுக்கு உரித்தான நியாசம், இருடி, சந்தசு, அதிதேவதை, பீஜம், சத்தி, கீலகம் முதலியவற்றின் உண்மையை உணர்ந்து அந்தந்தத் தேவதைகளை ஆராதனைசெய்தலாம். இதுயோகபாதப்பகுப்பு ஆதலால் உபாசனகாண்டம் பற்றி ஆசனம் மந்திர ஜெபத்தோடுகூடிய பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை என்பவைகளால் மனமாதி அந்தக்கரணங்களை நிறுத்தித் தெய்வத்தை வழிபடும் தன்மையைப் போதிப்பதென்பர்.

உபதேசகலையாவது:-ஞானப்பாதப் பகுப்பாதலால், ஞானகாண்டம் பற்றித் தனக்கு முதலும் முடிவுமில்லாத பரமசிவனுடைய வியாத்தி வியாபகத்தையும், ஆன்மாவினுடைய வியாத்தி வியாபகத்தையும், பாசத்தினுடைய வியாத்தி வியாபகத்தையும் ஆசாரியனிடமாக உள்ளபடி அறிதலாம். சரியை கிரியை இவ்விரண்டும் தந்திரகலையில் அடங்கும், யோகம் மந்திரகலையிலடங்கும், ஞானபாதம் முழுதும் உபதேசகலையில் அடங்கும். 'பிறைநிமாறின்றிப் பேணல் தந்திர மந்திரங்கள்-மறைநிகளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையாகும்' (சித்தி—அளவை—13) எனத் தந்திரகலை மந்திரகலைகளைக் கூறியொழித்து, 'தனைநியீறிலாதான் தன்மையுணர்த்துத லுபதேசந்தான்' (சித்தி—அளவை—13) என ஞானபாத முழுதும் உபதேசகலை எனக்கூறியது காண்க.

இனி, சித்தாந்த மரபு கண்டன கண்டனத்துள்ளும் 57-வது பத்தியில் தர்க்கிரகலை முதலியவைகளைக்கூறி ஸ்ரீ மாதவச் சிவ ஞானயோகிகள் பிறர் கொள்கைகளை மறுத்தருளுதலை ஆண்டு விரிவாகக் காணலாம்.

மூன்ருவது ஆகமம் முற்றிற்று.

## நான்காவது-போலி

மேற்கூறிய அநுமானத்திற்குரிய பக்கம் முதலிய துணைகளுள் துணிபொருட்கு இடனுதலாகிய பக்க இலக்கணத்தில் குறைபாடுடையதாயும், ஒருபக்கமொத்துப் பக்கம்போலத் தோன்றுவதாகிய பக்கப்போலி; துணியும் பொருட்கு இடனுகாததூஉம், அதற்கு ஒரு பக்கம் இடனுகாததூஉம், துணிந்த பொருட்கு இடனுவதூஉம், அதற்கு ஒருபக்கம் இடனுவதூஉம் என நான்கு வகைப்படும். ஏது இலக்கணத்திற் குறைபாடு உடைத்தாயும், ஒருபக்கம் ஒத்து ஏதுப்போலத் தோன்றுவதுமாகிய ஏதுப்போலி; துணியப்படாததூஉம், மறுதலைக்கட்படுவதூஉம், ஒருதலைப்படாததூஉம் என மூவகைப்பட்டு விரியான் இருபத்தொன்ரும். உவமை இலக்கணமின்றியும் உவமைபோலத் தோன்றுவதாகிய உவமைப் போலி; உடம்பாடுபற்றியும், எதிர்மறைபற்றியும் இருவகைப்பட்டு விரியால் பதினெட்டு வகைப்படும்.

இனி, தர்க்கவாதத்தின்கண் பேசத்தெரியாமையாகிய தோல்வித்தானம் மயங்கப்பேசுதலும், சும்மாவிருத்தலும் என இருவகைப்பட்டு, விரியான் இருபத்திரண்டாம் அவையெல்லாம் அளக்குமிடத்து அறுபத்தைந்தாம். இவைகளைவிசாரிக்குமிடத்து அநுமானஅளவைக்கு எவ்விடத்தும்குற்றங்களாம் என்பர். இவை குற்றமாதலின் ஆகமஅளவைக்குமுன்வையாது இறுதிக்கண் வைக்கப்பட்டன. விரித்த நூல்களிற் காண்க. வடநூலார் போலியை ஆபாசம் என்பர்.

நான்காவது-போலி முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவ சோடசக்கிரியை விளக்கம்

திருவாவடுதுறையாதீனம்
1954

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவ ஷோடசக்கிரியை விளக்கம்

1. கர்ப்பாதானம் :— மாயாகர்ப்பத்திலிருந்து ஆன்மாவை எடுத்துச் சிவகர்ப்பத்திலே சேர்ப்பித்தல். இதனை,

“ அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளில் அழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளாலென் நந்தி அகம்புகுந் தானே.”

“ அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி
அருளால் அடிபுனைந் தார்வமும் தந்திட்
டருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளாலென் நந்தி அகம்புகுந் தானே.”

திருமந்திரம் — 1800, 1801.

2. புஞ்சவனம் :— ஆன்மா சிவானந்த போக நிலையை அடைதற்குரிய நிலைகளை அடையச்செய்தல். அஃதாவது மாயா காரியமான பாவ அநுபவ போக அரூபமாகிய ஆன்மாவை அதிலிருந்துமீட்டல்.

3. சீமந்தம் :— ஆன்மா சிவபோகத்தைத் துய்த்தற்குரியவுருகை ஆக்குதல். சீமந்தபுத்திரன் என்று சொல்லப்படுவதும் இக் கருத்துப்பற்றியேயாம்.

4. சாதகன்மம் :— சிவகர்ப்பத்தினின்று தோன்றுதல், ஜாதம் —பிறத்தல்,

5. நாமகரணம் :— அதற்குரிய பெயரிடுதல், அஃதாவது சிவானந்த போகத்திற்குரிய உணர்ச்சியை ஊட்டுதல்.

6. அன்னப்பிராசனம் :— சிவபோகத்தை ஊட்டுதல். இவ்விதம் சோற்றை உண்ணச்செய்து சிவபோகத்தை அநுபவிப்பதற்குத்தகுதியுடையவனாகச் செய்தல்.

7. சௌளம் :— சிவோத்கிருஷ்டத்தை ஆன்மா அறியுமாறு செய்தல். 'அருங்கலைகளுக்கு எல்லை ஆயுங்காலே' என உணர்த்துதல். சிகை என்பது அது. சிகாபடலம் காண்க.

8. உபநயனம் :— ஞானக்கண் கொண்டு கண்டு காட்டி ஆன்மா கடவுளைக் காணச் செய்தல். உபநயனம் என்பது சிவாகமங்களில் தீட்சை என்று பேசப்படும்.

9. விவாகம் :— விக்கினேசுரபூசை, புண்ணியாகம், பஞ்சகவ்வியம், அநுக்ஞை, பிதிர்வழிபாடு, (சாதகன்மம் நாமகரணம் முதலிய கிரியைகளில் சில), அங்குரபூசை, இரட்சாபந்தனம், சூரியபூசை (கும்பம்), உமாமகேசுரபூசை (கும்பம்), அக்கினிகாரியம், திருமாங்கலிய பூசை, அபிடேகம் முதலியன; திருமாங்கலியதாரணம், பொரியால் ஆகுதி செய்தல் (லாஜ ஹோமம்) முதலிய சடங்குகள்.

10. அக்ஷதையால் மலரிடல் :— பிரமச்சரியநிலையிலே ஒருவன் பெற்ற ஞானங்களெல்லாம் உலகியலில் பிரவேசம் கருதி இப்போது தொண்டு செய்யுங்காலத்திலே மறதியாலேனும், பழக்கமின்மையினாலேனும் நீங்குமாதலால், அந்நிலையிலே ஆசிரியர்பால் தான்பெற்ற சிவஞானக்கருத்துக்கள் குன்றாது என்றும் நிலைத்திருக்கவேண்டும் என்பதுதான் இச்சடங்கின் கருத்து. அக்ஷயம் - குறையாதிருத்தல்.

திருமணக்காலத்தில் பந்தர்க்கால் முகூர்த்தம்பண்ணல், சாலுங்கரகம் அமைத்தல், அரசின்கிளை ஒதியின்கிளை நடுதல் ஆகிய இவைகள் எல்லாம் உயர்ந்த குறிக்கோளையுடைய உபாங்கமான கிரியைகளாம். இவைகளைப் பூசிக்கும் போதெல்லாம் சிவமந்திரங்களாலேயே பூசித்தல்வேண்டும்.

முற்றிற்று.

---

# பதினாறு சம்ஸ்காரங்கள்

பதினாறு சம்ஸ்காரங்களாவன :— ருதுசங்கமனம், கருப்பாதானம், பும்ஸவனம், சீமந்தம், ஜாதகர்மம், உத்தாபனம், நாமகரணம், உபநிஷ்கிராமணம், அன்னப்பிராசனம், பிண்டவர்த்தனம், சௌளம், உபநயனம், காண்டோபகரணம், காண்டமோசனம், சமாவர்த்தனம், விவாகம் என்பனவாம்.

1. ருதுசங்கமனம்:— அஃதாவது, புருடன் தன்னைச் சிவரூபமாகவும் மனைவியைச் சத்திரூபமாகவும் பாவித்துச் சங்கமத்திற்குரிய ருதுகாலத்தில் மனைவியைச் சேர்தல்.

2. கருப்பாதானம்:— அஃதாவது, கருப்பத்தை நிலைக்கச்செய்தல். அஃதெவ்வாறெனின்? முதல் மாதத்தில் கருப்ப இலக்கணத்தை அறிந்து, விதிப்படி கிரியைகளைச் செய்து, கோதுமை உழுந்து சேகரித்து அவற்றுடன் பால் நெய் தயிர் கலந்து ஈசான மந்திரத்தால் மூன்றுமுறை மனைவியைப் பருகச் செய்து, தற்புருஷமந்திரத்தால் மனைவியின் வயிற்றைப் பரிசித்தல் முதலியன செய்தல்.

3. பும்ஸவனம்:— அஃதாவது, புருடக்குழந்தையாகப் பிறப்பதற்குப் பிழிதல். அஃதெவ்வாறெனில்? விதிப்படி கிரியைகளைச் செய்து, ஆல் அரசு புரசு அத்தி என்னும் இவற்றின் மொட்டுக்களை நெய்கலந்த பாலில் சேர்த்தரைத்து அக்கினியின் மேற்குப்பாகத்தில் மனைவியை யிருக்கச்செய்து, புது வஸ்திரத்தால் மூக்குத்துவாரத்தில் வாமதேவ மந்திரத்தால் சிவனைத் தியானித்துப் பிழிதல். இந்த சம்ஸ்காரம் கருத்தரித்த இரண்டு அல்லது நான்காவது மாதத்தில் நல்ல தினத்திற் செய்யவேண்டும்.

4. சீமந்தம்:—இந்தச் சொல்லுக்குப் பொருள் மகிடு என்பது. அஃதாவது தலைமயிரை வகிர்தல். அஃதெவ்வாறெனில்? நான்கு அல்லது ஆறு, அல்லது எட்டாவது மாதங்களில் மந்திரத்தை முன்னிட்டுச் செய்யவேண்டிய கிரியைகளைச் செய்து, முள்ளம்பன்றியின்முட்களால் மயிரைவகிர்தல்.

5. சாதகர்மம்:—அஃதாவது புத்திரன் பிறந்ததும் விதிப்படி பார்த்தல், நாபிக்கொடி அறுத்தல், ஸ்நானஞ் செய்வித்தல் முதலியன செய்தல்.

6. உத்தாபனம்:—அஃதாவது வெளியே வரச்செய்தல். அது பத்துப் பன்னிரண்டு முப்பது முப்பத்திரண்டுக்குமேற் பட்ட தினங்களிற்செய்தல்வேண்டும். அஃதெவ்வாறெனில்? மேலே சொல்லப்பட்ட தினங்களின் இரவில் சகல திரவியங்களையும் பாண்டங்களையும் போக்கி, வெண்கல முதலியவற்றை மண்ணாலும் வஸ்திரத்தை வண்ணானாலும் மற்றவைகளை அவற்றிற்குத் தக்கவாறு உசிதமானவைகளாலும் சுத்திசெய்து புருஷன் சௌளகர்மஞ் செய்துகொள்ளல்வேண்டும். பெண்கள் ஸ்நானஞ்செய்தபின் அக்கினி காரியஞ்செய்து பாத்திரத்தைச் சுத்திசெய்து பஞ்சகவ்யம் உட்கொள்ளுதல், பூரணாகுதி என்னு மிவைகளைச் செய்து சிவனை உத்தாபனஞ் செய்யவேண்டும்.

7. நாமகரணம்:—அஃதாவது பெயரிடுதல். அஃதெவ்வாறெனில்? பத்து அல்லது பன்னிரண்டாவது தினங்களில் மந்திரத்தை முன்னிட்டுக் கிரியைகளைச் செய்து, ஆணாயின் சிவநாமங்களிலொன்றையும், பெண்ணாயின் அம்பிகைநாமங்களிலொன்றையும் இடுதல் வேண்டும்.

8. உபநிஷ்கிராமணம்:— அஃதாவது குழந்தையை வெளியே கொண்டுவருதல். அஃதெவ்வாறெனில்? நான்காவது மாதத்தில் அக்கினிவளர்த்து ஓமஞ்செய்து வெளியில் கோமயத்தால்

மெழுகி மணலால் மேடைசெய்து அரசைவைத்துச் சூரியனை அர்ச்சித்துத் தாயுடன் குழந்தையை வெளியே கொண்டு வந்து பெரியோர்களாலாசீர்வாதஞ் செய்யப்பெறுதல்: ஆலயத் துக்கு எடுத்துச் செல்லுதல்.

9. அன்னப்பிராசனம்:—அஃதாவது சோறு ஊட்டுதல். இஃது ஆறு அல்லது எட்டாவது மாதங்களில் செய்யவேண்டும். அஃதெவ்வாறெனில்? நாந்தி யென்னும் சிரார்த்தத்தை முன்னிட்டுப் பிராமணருக்குப் போஜனஞ்செய்வித்து நல்ல முகூர்த்தத்தில் குழந்தைக்குப் பாயசத்தைப் புசிப்பித்தல்.

10. பிண்டவர்த்தனம்:—அஃதாவது தேகத்தை விருத்திசெய்தல். அஃதெவ்வாறெனில்? விதிப்படி அக்கினியைப் பூஜித்து, புத்திரனுடைய வலது பெருவிரல் முதல் ஈசான முதலிய மந்திரங்களையும், கண்களில் வியோம வியாபி தசாக்ஷரி மந்திரங்களையும் ஜபித்து, தேன் பால் முதலியன கலந்த மதுவர்க் கங்கொடுத்தல்.

11. சௌளகர்மம்:— அஃதாவது தலைமயிரைக்கழித்தல். அஃதெவ்வாறெனில்? விதிப்படி கிரியைகளைச்செய்து மந்திரத்தை உச்சரித்துத் தலைமயிரை நனைத்துத் தருப்பையால் புரோக்ஷித்து முதலாவது ஆசிரியரும் பின்னர் நாவிதனும் தலைமயிரைக் கழித்தல்.

12. உபநயனம்:— அஃதாவது வேதத்திற்குஅதிகாரியாக்குதல். இது பிறந்த ஐந்து ஆறு எழு ஒன்பது பதினாறு வருடங் களுக்குள் செய்யவேண்டும். பிராமணர்களுக்கு எட்டு வயதிலும் அரசர்களுக்குப் பதினொருவயதிலும் வைசியர்களுக் குப் பன்னிரண்டுவயதிலும் உபநயனஞ் செய்யத்தக்கது. இதில்பூணூல், மான்றோல்முதலியவற்றைத் தரிக்கும்படி செய்வதுண்டு.

13. காண்டோபக்கிரமணம்:-அதாவது காண்டரிஷியைத் திருப்தி செய்தல். அஃதெவ்வாறெனில்? காண்டரிஷியின் பொருட்டு அஸ்திரமந்திரத்தால் ஓமமுதலியனசெய்து, சுவர்ணமுதலியவற்றால் செய்யப்பெற்ற பிக்ஷாபாத்திரங்களை யெடுத்துக் கொண்டு, பவதி பிக்ஷாந்தேகி யென்று கூறிப் பிக்ஷையெடுத்தல்முதலிய கிரியைகளைச் செய்தல்.

14. காண்டமோசனம்:—அஃதாவது காண்டரிஷியின் விரதத்தை நீக்கல். அஃதெவ்வாறெனில்? விதிப்படி கிரியைகளைச் செய்து, அக்கினியை ஜலத்தால்வளைத்து, வியோமவியாபி மந்திரத்தால் நூறுஆகுதிகள்செய்து, பிர[illegible] துயே ஸ்வாஹா என்று எட்டு ஆகுதியால் காண்டமோசனஞ் செய்தல்.

15. சமாவர்த்தனம்:—அஃதாவது பிரமசாரி விரதத்தைப் பூர்த்தி செய்தல். அஃதெவ்வாறெனில்? உத்தராயணத்தில் குரு சுக்கிர உதயங்களில் மாசிமாதமுதல் ஐந்துமாதங்களுள் சித்திரைமாதம் நீங்க ஏனையமாதங்களில் விதிப்படி கிரியைகளைச்செய்து, பிரமசரியவிரதத்தைநீக்கி, சர்வாங்கமுஞ் சௌளஞ்செய்து, குண்டல முதலியவற்றால் அலங்கரித்து வடக்குமுகமாகச் செல்லுங்காலத்து, பந்துக்களால் இல்லறத்தை வகிக்கும்பொருட்டுப் பிரார்த்திக்கப்படுதல்.

16. விவாஹம்—அஃதெவ்வாறெனில்? உத்தமகுலத்துதித்த நற்குணமுடைய பெண்ணைக் கோத்திரத்தைச் சொல்லிக் கொண்டு தாரைவார்த்துத் தரப்பெறுதல்.

முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மகேசுரபூசை ஆசீர்வாதம்

1. தேசத்தில் உள்ள சிவாலயங்கள்தோறும் நித்திய நைமித்திக பூசை திருப்பணியாதிகள் நடக்கும்பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹரா ! ஹரா !! ஹரா !!!

2. சபாபதிக்கு மஹாபிஷேகமும், நைவேத்தியமும், திருப்பணி உற்சவாதிகளும் நடக்கும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹரா ! ஹரா !! ஹரா !!!

3. பக்தசனங்களுக்குச் சிவஞானமும், தீர்க்காயுளும், சிந்தித மனோரத சித்தியும், தேவகுருப்பிரசாதமும் உண்டாகும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹரா ! ஹரா !! ஹரா !!!

4. மகேசுரபூசை இந்தக் குருமடத்திலே சதாகாலமும் சிறப்பாக நடந்துவரும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹரா ! ஹரா !! ஹரா !!!

5. அடியேனுக்கு நல்ல புத்தியுண்டாகும் பொருட்டு அனுக்கிரகம் பண்ணுக.

ஹரா ! ஹரா !! ஹரா !!!

6. அடியார்கள் எல்லோரும் சிரமம் தீரும்படி திருவமுது செய்தருளுக.

ஹரா ! ஹரா !! ஹரா !!!